


திகட சக்கரச் செம்முகம் ஐந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கரத் வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்

மண்ணுல கத்தினில் பிறவி மாசற
எண்ணிய பொருளெலாம் எளிதின் முற்றுறக்
கண்ணுதல் உடையதோர் களிற்று மாமுகப்
பண்ணவன் மலரடி பணிந்து போற்றுவாம்

# ஸப்தகிரி

செப்டம்பர் - 1994

தனிப்பிரதி ரூ. 2 | மலர் 25
வருடச்சந்தா ரூ. 24 | இதழ் 4

சிறப்பாசிரியர் :
திரு. டி.வி.எஸ்.என். மூர்த்தி, ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

பொறுப்பாசிரியர்:
திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.

## உள்ளுறை



## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : திருமலையானின் கல்யாணோத்ஸவம்

முதல் உள்ளட்டை : ஸ்ரீவிநாயகர்
சித்திரம் : கே. ஜெகதீஷ்

2-வது உள்ளட்டை : ஸ்ரீவாமனர்
சித்திரம் : திரு. நாராயணகிரி தத்து

பின்னட்டை : ஸ்ரீ அவினாக்ஷி அம்மன் கோயில்
நாராயணவனம் (புத்தூர் அருகே)

நடுப்பக்கத்தில் : ஆனந்த விமானத்துடன் கூடிய திருமலைக்கோயில்.

JAGADISH

# உங்களுடன்...

இறைவனால் படைக்கப்பட்ட ஓரறிவு முதல் ஆறறிவுவரை உள்ள எந்த உயிரின மும் இம்மண்ணுக்குச் சுமையானது அல்ல. ஏனெனில் படைக்கப்பட்ட எந்த உயிரினமும் அவற்றிற்கே உரிய தனித்தன்மைகளுடன் விளங்கவே செய்கின்றன. தன் கர்ஜனையின் மூலம் யானைகளையும் நடுங்க வைக்கும் ஒரு சிங்கத்திற்குத் தெரியாத 'சேமிப்பு' எனும் இயல்பானது, காற்றடித்தால் திசை தெரியாமல் போகும் ஒரு எறும்பினிடம் அமைந்த விந்தையை என்னென்பது! அத்தகு சிற்றெறும்புகள் சேமித்து வைத்த புல்லரிசி பலரது பசியைத் தீர்த்திட்ட செய்தியை சங்க இலக்கியம் படம் பிடித்துக் காட்டும். ஆறறிவு படைத்திட்ட மனிதன் ஒருவன் சிறிதும் அறியாவண்ணம் அவன் பின்வந்துபோகும் ஒரு பூனையின் காலடி ஓசையினைப் பத்தடி தூரத்திலேயே கண்டு கொள்ளும் ஒரு எலியின் ஆற்றலை என்னென்பது! இவ்வாறு ஆண்டவன் படைத்திட்ட பல உயிரினங்களைப் பார்த்திடும் போது, ஆற்றலும், வலிமையும் உருவத்தைப் பொறுத்து அமைவதில்லை என்பது தெளிவாகும்.

இறைவன் படைத்திட்ட உயிரினங்களே இத்தகு அரிய செய்தியினைத் தந்திடும் போது, அந்த இறைவனே தன் அவதாரத்தின் மூலம் - தன் உருவத்தின் மூலம் கூறிடும் செய்திகள் எந்த அளவு உயர்ந்தன என்பதை நாம் அறிதல் அவசியமாகும். திருமால் தான் எடுத்திட்ட அவதாரங்களின் மூலம் உயிரின் பரிணாம வளர்ச்சியினையும், மனிதன் மகான் ஆவதற்கும், பிறகு தெய்வமாவதற்குமுரிய வாழ்க்கை இலக்கணத்தினையும் தன் உருவத்தாலும், சொல்லாலும், செயலாலும் விளக்கினான். அந்த வகையில் ஸ்ரீவிஷ்வக்சேனர், ஸ்ரீகணேசர், அருகநாயகர், புத்த நாயகர் எனப் பலவாறு பல்வேறு சமயத்தாராலும் இந்நாட்டிலும் கடல் கடந்து வெளிநாடுகளிலும் வழிபடப்பட்டு வரும் 'விநாயகரின்' அவதாரச் செய்திகள் நமக்குக் கூறும் செய்திகள் என்ன என்பதைப் பார்த்திடின், அது நமது சிந்தனையையும், செயலையும் உயர வழிவகுக்கும்.

குணம், இடம், காலம் கடந்த பிரணவ ஸ்வரூபியாகவும், 'தத்வமஸி' எனும் உபநி ஷத்தின் சாரமாகவும் விளங்கிடும் விநாயகன் அலங்காரப்பிரியனோ, அபிஷேகப்பிரியனோ அல்ல. ஓர் எளிமைப் பிரியன். ஆம். ஒரு கைப்பிடி அல்ல, மூன்று விரல் பிடி அளவு சாணத்திலும், மஞ்சளிலும் அவனைக் கண்டு வழிபடலாம்.

வேலி போட்டு வளர்க்கப்படும் மணமணத்திடும், கண்களைப் பறித்திடும் மலர்க ளைக் கொண்டு மற்றைய தெய்வங்களை வணங்கிடும் நாம், இக்கணேசனை வேலியோரம் பூத்திடும், வளர்ந்திடும் மலர்கள் இலைகளைக் கொண்டும், ஏன் வெறும் அருகம்புல் கொண்டும் இவனருளைப் பெற்றிடலாம். அத்தகு ஏழையர் நெருங்கிடும் எளிமைத் தெய்வம் விநாயகன். நினைத்த இடத்தில், நினைத்த உருவத்தில், நினைத்த மாத்திரத்தில் 'அர்ச்சை' நிலை கொள்ளும் இத்தெய்வம் கணபதி, கஜானனன், விநாயன், பிள்ளையார், கணநாதன், லம்போதரன் என்று பல பெயர்களாலும் முப்பதிரண்டு உருவமைதிகளாலும் இனம், இடம், மொழி கடந்து பல்லோராலும் வழிபடப்பெற்று, இம்மண்ணில் ஒருமைப்பாட்டுச் சமய உணர்வினைக் காலம் காலமாகத் தழைத்தோங்க வழிவகுத்துள்ளான். வயிறு நிறைந்தவன் தீங்கு நினைக்கமாட்டான் என்பதைத் தன் பெருத்த வயிறுமூலமாகவும், மனிதனிடம் இருக்க

வேண்டிய ஆற்றலின், அறிவின் அவசியத்தை தன் யானைத்தலை மூலமாகவும் உணர்த்தினான். தன் உருவத்திற்குச் சிறிதும் பொருந்தாத மூஞ்சூறினைத் தன் வாகனமாகக் கொண்டதன் வாயிலாக பிறப்பில் எதுவும் கீழானதோ, உதவாததோ இல்லை என்பதை விளக்கினான்.

பொன் வைத்த இடத்தில் பூ வைத்தாவது வழிபடுமாறு பலர் கூறிட, அப்பூவைத்த இடத்தில் புல் வைத்தாவது வழிபட வழிவகுத்தவர் நம் பிள்ளையார். மனிதனுக்கு அழகு தருவது அவனது உருவமோ, நிறமோ அல்ல. தியாக உணர்வே அவனுக்கு நிரந்தரமான அழகை அவனிடம் விட்டுச்செல்லும் என்பதற்கு யானையின் ஆற்றலுக்கும் அழகுக்கும் உறுப்பான தந்தங்களில் ஒன்றினை ஒடித்ததன் மூலமும், அந்தத் தியாகம் சமுதாயம் வாழப் பயன்படுமானால் அத்தியாகம் புனிதமானதாக விளங்கும் என்பதற்கு ஒடிந்த அந்த தந்தத்தைக் கொண்டு இம்மண்ணில் பக்தி உணர்வு தழைத்தோங்கிடும் வகையில் ஐந்தாம் வேதமான பாரதத்தை எழுதிய விநாயகனின் செயல் திகழ்ந்தது. பெற்றவர்களின் பெருமை அறிந்து, அவர்களை வழிபடுவதைவிட இந்த உலகில் வேறெந்த புண்ணிய காரியமும் இல்லை என்பதை, தன் தாய்தந்தையரையே புனித தீர்த்தங்களாகவும், புண்ணிய பூமியாகவும், மூவுலகங்களாகவும் கருதி அவர்களைச் சுற்றி வந்து, கனியைப் பெற்றுக்கொண்ட விநாயகரின் செயல் கூறாமல் கூறியது. இம்மண்ணில் எந்தப் பிறவியும், இகழத்தக்கதல்ல எனும் அறிவுரையை, தன் உருவத்தைக் கண்டு எள்ளி நகையாடிய சந்திரனுக்கு தான் இட்ட சாபம் மூலம், தந்திட்டான் நம் பிள்ளையார்.

'வேண்டும், வேண்டும்' என்று வரம் கேட்டு மற்றைய தெய்வங்களை வழிபடும் போது, 'வேண்டாம்' என்று எல்லோரும் வழிபடும் ஒரே தெய்வம் நம் விக்னநாயகன் தான். விக்கனங்களை - தடைகளை ஏற்படுத்த வேண்டாம் என்று கூறி வழிபடும் இக்கணேசனை, வழிபடாததால், போருக்குச் சென்ற சிவனாரது தேரின் அச்சுமுறிந்தது; அம்பிகையால் பண்டாசுரனை அழிக்க முடியவில்லை. பிரம்மனின் ஆரம்பகால படைப்புகள் கேலிக்குரியதாயிற்று; மாயக் கண்ணன் பழிக்கு ஆளானான்.

சித்தி புத்தியரை மனைவியாகக் கொண்டதன் மூலம், அறிவின் அவசியத்தையும், அவ் அறிவினால் நற்குணங்கள் பெற்று நினைத்ததை முடித்திடும் ஆற்றலைப்பெற வேண்டியதின் முக்யத்துவத்தையும் சுட்டிக்காட்டினான் கணநாதன். அரங்கம் தோன்றவும், திருமுறைகள் கிடைத்திடவும், காவிரி நடந்திடவும் துணைநின்று இம்மண்ணில் பக்திப்பயிர் வளர்ந்திட வழிசெய்தன, அவன்தம் திருவிளையாடல்கள். 'ஜ்யேஷ்டராஜன்' 'பிரம்மணஸ்பதி' என்று வேதங்களால் புகழப்பெற்று, புராணங்களால் போற்றப்பட்டு, எல்லாச் சமயத்தாராலும் முதலில் வழிபடப்பெறும் பெருமை பெற்று, அதனால் ஆற்றங்கரை, குளக்கரை, அரசமரத்தடி என்று தன் இருப்பிடங்களை எளிமையாக்கிக் கொண்டு சந்துகளையும் சந்திகளையும் தன் சன்னதிகளாக்கிக் கொண்டு அருள்புரிந்திடும் தும்பிக்கையான் சமய ஒற்றுமைக்கும், சமுதாய ஒருமைப்பாட்டிற்கும் ஒரு நம்பிக்கைத் தெய்வமாக விளங்குகிறான். அதற்கு, இன்று நாட்டின் பல்வேறு பகுதிகளில், அவன் புகழ் பேசப்பெறும் 'விநாயக சதுர்த்தி' திருநாளன்று, பல்வேறு தோற்றங்களில் பல்வேறு அளவுகளில் காலை முதல் இரவு வரை விநாயகப்பெருமான் பவனிவரும் காட்சியே, செய்திகளே சாட்சியாக அமைய, அதுவே என்றும் இம்மண்ணில் ஒரு பக்தி உணர்வினையும், மனிதநேய மேம்பாட்டினையும் தோற்றுவிக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

☆☆☆

# செய்திச் சுருக்கம்

## ஸ்ரீதியாகராஜ இசைவிழா

திருப்பதி ஸ்ரீதியாகராஜ விழாக்குழுவின் சார்பில் 52-ஆவது ஆண்டு வருடாந்திர இசைவிழா ஒன்று 27-7-94 முதல் 5-8-94 வரை பத்து நாட்களுக்கு வெகுச்சிறப்பாக திருப்பதி தியாகராஜ மண்டபத்தில் நடைபெற்றது. 27-7-94 அன்று மாலை நடைபெற்ற இசைவிழாவில் துவக்கநாள் நிகழ்ச்சிகளுக்கு வருகைபுரிந்தோரை, விழாக்குழுவின் தலைவர் திரு. எம். கிருஷ்ணசாமி அவர்கள் வரவேற்று, விழாவைத் துவக்கி வைக்க வந்திருந்த, பிரபல ஆங்கில நாளேடான 'இந்து' பத்திரிகையாசிரியர் திரு. என். ரவி அவர்களையும், விழாவிற்குத் தலைமை வகித்த, திருப்பதி ஸ்ரீவேங்கடேஸ்வரா பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் பேராசிரியர், பி. ஜெயராமமிரெட்டி அவர்களையும் கூட்டத்தினர்க்கு அறிமுகப்படுத்தி வைத்தார். மேலும் தம்முடைய வரவேற்பு உரையில், திரு. கிருஷ்ணசாமி அவர்கள் பல்கலைக்கழகப் பாடத்திட்டத்தில் இசை மற்றும் நாட்டிய துறைகளையும் சேர்த்துக் கொள்ள வேண்டியதன் அவசியத்தையும் திருமலை மற்றும் திருப்பதியில் நடைபெறும் சமயம் மற்றும் இசை நிகழ்ச்சிகளின் விவரங்களை, நாட்டில் வெளியாகும் 'இந்து' பத்திரிகையின் எல்லா பதிப்புகளிலும் வெளியிட வேண்டியதன் முக்யத்துவத்தையும் பற்றி பேசினார். பின்னர் பேசிய விழாத் தலைவர் துணைவேந்தர் அவர்கள் இசையின் பெருமையைப் பற்றி விரிவாக ஆங்கிலத்தில் உரையாற்றினார். விழாவைத் துவக்கி வைத்துப் பேசிய திரு. என். ரவி அவர்கள் சமயம் மற்றும் கலாசார பின்னணி கொண்ட திருப்பதியின் பெருமையினையும், சிறப்பினையும் சுட்டிக்காட்டினார். ஸ்ரீதியாகராஜ விழாக்குழுத்தலைவரான தி.தி. தேவஸ்தான செயலாட்சித்தலைவர் திரு. டி.வி. எல். என். மூர்த்தி அவர்கள் தியாகராஜ விழாக்குழு ஆற்றிவரும் இசைத்தொண்டினையும் தி.தி. தேவஸ்தானத்தாரின் பங்கினையும் விரிவாகப்பேசினார். இறுதியில், விழாக்குழுவின் உறுப்பினரான திரு. என். பலராம ரெட்டி அவர்கள் நன்றி நவின்றார். அதனைத் தொடர்ந்து மதுரை திரு. டி.என். சேஷகோபாலன் குழுவினரின் இசைக்கச்சேரி ஒன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது. அடுத்த எட்டு நாட்களின் போது திருவாளர்கள் டாக்டர் ஸங்கமேஸம், பி. நடராஜன், டாக்டர் பாப்பு வேணுகோபாலராவ், பி.எம். சுந்தரம், ஐ. காமேஸ்வரராவ், உமையாள்புரம் கே. சிவராமன், ஆகியோர் பங்கேற்ற இசை விளக்க உரைகளும், திருவாளர்கள் டி. பசுபதி, திருபுன் துருத்தி வேங்கடேசன் டாக்டர் லோகநாத சர்மா பி. ரமணஸ்ரீ, பாபநாசம் அசோக் ரமணி, டி. சேஷாசாரி, டி. ராகவாச்சாரி, டாக்டர் ஓமனக்குட்டி, டி.வி. கோபால கிருஷ்ணன், டாக்டர் நூகல சின்னசத்யம், மற்றும் திருமதியாளர்கள் துவாரம் எம்.வி.ஜே. லக்ஷ்மி, பம்பாய் ஜெயஸ்ரீ, டி. வரததினி, கீதா ராஜசேகர, துநலக்ஷ்மி ஆகியோரின் இன்னிசைக் கச்சேரி நிகழ்ச்சிகளும், பி. வசந்தகுமார், ஜெயந்தி, கீதா கிருஷ்ணமூர்த்தி, ஆர். கிருஷ்ணன் ஆகியோரின் வீணை நிகழ்ச்சிகளும், டாக்டர் பிரபஞ்சம் சீதாராம், குஞ்சுமணி நீலா ஆகியோரின் புல்லாங்குழல் நிகழ்ச்சிகளும், திரு. டி. என். கிருஷ்ணன் அவர்களின் வயலின் நிகழ்ச்சியும் ஸ்ரீகலா பாரத் மற்றும் கனகா ஸ்ரீநிவாசன் ஆகியோரின் பரதநாட்டிய நிகழ்ச்சியும் திரு. ஷர்பாரி முகர்ஜி அவர்களின் இந்துஸ்தானி நிகழ்ச்சியும் இனிது நடைபெற்றன.

30-7-94 அன்று மாலை பிரபல பாடகர் திரு. நேதுநூரி கிருஷ்ணமூர்த்தி அவர்கள் அன்னமாச்சார்யா பாடல்கள் சிலவற்றிற்குப் பண்ணமைத்து வெளியிட்ட தெலுங்கு நூலினை தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர் திரு. ஜி. ஸ்ரீராம சந்திரமூர்த்தி அவர்கள் வெளியிட்டார்.

கடைசி நாளான 5-8-94 அன்று, கர்நாடகாவைச் சார்ந்த புகழ்பெற்ற கர்நாடக இசைப்பாடகர் வித்துவான் திரு. ஆர். கே. ஸ்ரீகாந்தன் அவர்களுக்கு ஸ்ரீதியாகராஜா விழாக்குழுவின் சார்பில் 'ஸப்தகிரி ஸங்கீத வித்வன்மணி' எனும் பட்டம் தவத்திரு ஸ்ரீதிரிதண்டி இராமாநுஜ சின்ன ஜீயர் சுவாமிகளால் வழங்கப்பட்டது. அதற்கு முன்பாக இது சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்குத் தி.தி. தேவஸ்

தான பொறுப்பாண்மைக்கு மூத்தலைவர் திரு. ஏ. செங் கல்ரெட்டி அவர்கள் தலைமை வகிக்க, தி.தி. தேவஸ் தான செயலாட்சித்தலைவர் திரு. டி.வி.எல்.என். மூர்த்தி அவர்கள் கூட்டத்தினரை வரவேற்றார். அதனைத் தொடர்ந்து திரு. ஸ்ரீகாந் தன் அவர்களின் இசைக்கச் சேரி இனிது நடைபெற்றது.

* * *

## வேள்வி

உலகில் அமைதி நில வும் பொருட்டு திருமலை யில் 14-10-94 முதல் 28-10-94 வரை 15 நாட்களுக்கு விஜய வாடா சீதாநகரம் ஸ்ரீதிரிதண்டி சின்ன ஸ்ரீமந்நாராயண ராமா னுஜ ஜீயர் அவர்களின் மேற் பார்வையில் 'ஸஹஸ்ர குண் டாத்மக ஸ்ரீமஹா விஷ்ணு யாகம்' ஒன்று நடைபெற உள் ளது. ரூ. 2 கோடி செலவில் நடைபெறும் இவ் வேள்விக்கான அடிப்படை வச திகளை தி.தி. தேவஸ்தானம் மேற்கொண்டுள்ளது. மேலும் இவ்வேள்விக்கான நன்கொடை யினை பொதுமக்களிடமி ருந்து எதிர்பார்க்கப்படுவதாக ஸ்ரீஜீயர் அவர்கள் தெரிவித்துள் ளார். சுமார் 50,000 யாத் திரிகப் பொதுமக்கள் கலந்து கொள்ளும் இவ்வேள்வியானது திருமலையில் கோயிலிலிருந்து சுமார் 7 கி.மீ. தொலைவில் உள்ள 'கோகர்ப்பம்' நீர்த்தேக் கத்திற்கு அருகே மேற்கொள் ளப்பட உள்ளது. ஆயிரம் ஹோம குண்டங்கள் அமைக் கப்பட்டு நிகழவிருக்கும் இவ் வேள்வியின் முதல் கட்டமான "சாந்தி பாராயணம்" எனும் நிகழ்ச்சி 14-10-94 முதல் 16-10-94 வரை நடைபெறும். அத னைத் தொடர்ந்து, வேள்வி யானது 'ஹோமகுண்டங்களைப் புனிதமாக்கும் 'அக்னி மதனம்' எனும் சடங்கு மூலம் தொடங் கப்படும். வேத, ஆகம அறிஞர்க ளான சுமார் 3000 பேர் கலந்து கொள்ளும் இவ்வேள்வியானது 28-10-94 அன்று பூர்ணாஹுதியு டன் முடிவுறும். இவ்வேள்வி நாட்களின் போது, திருமலை யில் நாள்முழுவதும் வேதபா ராயணம், புராண, இதிஹாஸ, சமய இலக்கிய நிகழ்ச்சிகள் நடைபெறும். இதுபோது, ஜீயர் அவர்களின் 'விசாக தரங் கிணி'யைச் சார்ந்த 4000 சமயத் தொண்டர்களின் உதவிப் பணி யும் பயன்படுத்தப்படும்.

* * *

## 10-ஆவது

### விஷ்ணு சகஸ்ரநாம அகண்ட ஜப யக்ஞம்

உலக அமைதி, நல்வாழ்வு, ஆகியவற்றுக்காக விஷ்ணு சகஸ்ரநாம அகண்ட ஜப யக்ஞத்தை 10 ஆண்டுகளா கத் திருமலையில் சென்னை யைச் சார்ந்த ஸ்ரீவிஜயகணபதி விஷ்ணு ஸகஸ்ரநாம ஜப யக்ஞ அறக்குழு நடத்தி வருகிறது. இந்த ஆண்டு 10ஆவது ஆண் டாக மிகவும் சிறப்புற மேற்படி யக்ஞம் நடைபெற்றது.

31-1-94 காலையிலேயே 500க்கும் மேற்பட்ட பக்தர்கள் திருமலையில் குவிந்து விட்ட னர். அன்று மாலை 7 மணி அளவில் திருமலை ஆஸ்தான மண்டபத்தில் திரு. ஜவந்தி நாத ஐயரின் சங்கீத உபன்யா சம் சிறப்புடன் நடைபெற்றது.

மறுநாள் காலை நிறுவனத் தலைவர் J. கல்யாணசுந்தரம் அவர்கள் தலைமையில் ஆயிரக் கணக்கான பக்தர்கள் பஜனை செய்து கொண்டு திருமலை யின் நான்கு மாட வீதிகளிலும் வலம் வந்தனர். ஊர்வலத்தி னரை ஆஸ்தான மண்டபத்தில் நிறுவனத்தின் ஒருங்கிணைப்பா ளர் ஆர். கோவிந்தராஜன், என். ஸ்ரீனிவாசராவ், சந்தானகோபா லன், ராமசாமி மற்றும் பலரும் வரவேற்றனர். 11 மணி அள வில் திரு. எஸ்.பி. பிரபாக ரராவ் அவர்கள் தலைமையில் யக்ஞத்தின் துவக்கவிழா நடை பெற்றது. அதற்கு முன்பாக திருமதி பாமா இறைவணக்கம் பாட, திரு. கே.எஸ். வெங்க டநாதன் பக்தகோடிகளை வர வேற்றுப் பேசினார்.

திரு. திருதண்டி இராமாநுஜ நாராயண சின்ன ஜீயர் ஸ்வா மிகள் சகஸ்ரநாமத்தின் முக் கியத்துவத்தை இனிய தமி ழில் எடுத்துக்கூறி, யக்ஞத்தை யும் துவக்கி வைத்தார். ஜீயர் ஸ்வாமிகளை ஆஸ்தான மண் டபத்தில் நுழைவாயிலில் வேத கோஷம் முழங்க பூர்ணகும்ப மரியாதையுடன் வரவேற்கப்பட் டார்.

1000க்கணக்கான பக்தர்க ளுக்கு அனுதினமும் காலையும், மாலையும் அன்னதாதா டி.கே. நரசிம்மன் அவர்கள் உணவ ளித்தது குறிப்பிடத்தக்க நிகழ்ச் சியாகும். 2-8-94 காலை யக்ஞம் இனிது முடிவுபெற்றது.

# மறு பிறவி

திரு. ப.சி. இராமலிங்கம் - குடியேற்றம்.

உலகத்தில் பிறந்துவிட்டால் இறப்பு நிச்சயம். இறந்துவிட்டால் பிறப்பு நிச்சயம். இப்படித்தான் கீதையில் எம்பெருமான் கிருஷ்ணர் உரைக்கின்ருர். இதனால் மறுபிறவி உண்டு என்பது விளங்குகின்றது.

பல நாடுகளில் இதனைப் பற்றி ஆராய்ச்சியும் நடத்தியிருக்கிருர்கள். அமெரிக்காவில் தான் அதிக அளவில் ஆய்வுகள் நடத்தி, மறுபிறவி உண்டு என்று முடிவு செய்து, பல புததகங்களும் வெளியிட்டுள்ளார்களாம். இந்தியாவில் ராஜஸ்தான் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த எச்.என். பானர்ஜி, பெங்களூர் தேசிய மனவியல் நரம்புத்துறை மருத்துவர் திருமதி. வினோதாமூர்த்தி ஆகியவர்களும் மறுபிறவியைப் பற்றி ஆய்வுகள் நடத்தியுள்ளார்கள்.

இவ்வாறு ஆராயப்பட்ட சில சம்பவங்களைப் பார்த்தால் மறு பிறவியைப் பற்றி அறியலாம். உத்தரப் பிரதேசத்தில் இந்து பிராமணக் குடும்பத்தில், 1969 செப்டம்பர் மூன்ரும் தேதி ஒரு பெண் குழந்தை பிறந்தது. அதற்கு சொர்ணலதா என்று பெயரிட்டார்கள். அந்தக் குழந்தைக்கு மூன்றரை வயது நடக்கும் போது ஒரு விசித்திரம் நடந்தது. ஒருநாள், நகரசுத்தி தொழிலாளர்கள் வந்து, பன்றியைச் சுட பயன்படுத்துவதற்காக, அவர்கள் வீட்டைச் சுற்றியிருந்த குப்பைக் கூளங்களைக் கொண்டு செல்வதற்கு, சொர்ணலதாவின் பெற்றேர்களிடம் அநுமதி கேட்டனர. இதைப் பார்த்துக்கொணடிருந்த, அந்த பிராமணக் குலதது உதித்த சொர்ணலதா, தனக்கும் பன்றிக் கறி வேண்டுமென்று கேட்டிருக்கிருள். இதனைக் கேட்டு பெற்றேர்கள் திடுக்கிட்டு, குழந்தையை அடித்து அடக்கி விட்டனர்.

அன்றிலிருநது சொரணலதாவின் போக்கில் மாறுதல் தெரியத்தொடங்கியது. நாளாக நாளாக அவள் தன் முற்பிறவியில் தனது பெயர் சாந்தி எனவும், கணவன் பெயர் ராஜேந்தர் எனவும், குழந்தைகள் இருப்பதாகவும் கூறலானாள். கணவனும் ஒரு சுத்திகரிப்புத் தொழிலாளி என்றும், அங்கிருந்து சற்று தொலைவிலுள்ள ஒரு கிராமத்தில் தனது குடும்பம் வசிப்பதாகவும் கூறினாள். தான் மரணமடைந்தது ஸ்ரீராம நவமி நாளில் என்றும் அந்தத்தேதியையும் குறிப்பிட்டிருக்கிருள். இதை அறிந்த ஆய்வுக்குழுவினர் இவ்விவரங்களைச் சேகரித்து, அவள் குறிப்பிட்ட இடத்தில் சென்று விசாரித்ததில் அவ்வளவும் உண்மை என்பதை அறிந்தனர.

இதேபோல், இந்து வைசியக் குடும்பத்தில், 1965 ஜூன் 16ஆம் தேதி புஷ்பா என்ற பெண் குழந்தை பிறந்தது. அக் குழந்தைக்கு பேச்சு நன்ருக வந்ததும், தன் முற்பிறவியில் தனது பெயர் மந்தீப் கௌர் என்றும் தனக்குத் திருமணம் ஆகி குழந்தைகள் இருப்பதாகவும் கூறி, குழநதைகளின பெயர்களையும தெளிவாகச சொன்னாளாம். இரணடு வயதிலிருந்தே, புஷபா, கததியைககணடு மிகவும் பயநதாள. இதைப் பற்றிக் கேடட போது, முற பிறவியில மாமியாரின துரப போதனையால தன் கணவன் தனனைக கததியால குததிக கொலை செய்து விட்டான் எனத் தெரிவிததாளாம். இதையெல்லாம் அறிந்த நிபுணர்குழு, அவள் சொன்ன இடத்திற்குச் சென்று விசாரிததில் அனைத்தும் உண்மையாக இருந்தனவாம். இந்து வைசிய குடும்பத்தில் பிறந்தபோதிலும் புஷபா, முற்பிறவியின் சீக்கிய சமுதாய பழக்க வழக்கத்திலேயே மிகவும் ஆர்வம் காட்டியிருக்கிருள்.

நடநதவைகளைப் பார்க்கும் போது முற்பிறவி மறுபிறவி உண்டென்பதை அறியலாம். இனி நமது மதத்தில் இதனைப் பற்றி என்ன சொல்கிறது எனவும் பார்ககலாம்.

சாங்கம், உபாங்கம், பிரத்யங்கம் என மூன்று உண்டு. இவைகளை ஆன்மாவுக்கும், உடலுக்கும் பொருத்திப்பார்க்கலாம். சாங்கம் என்ருல் ஒட்டிக்கொண்டே இருப்பது, தனியாகப் பிரிக்க முடியாதது. உடலுக்கு சாங்கம் - கை, கால், காது போன்ற உறுப்புகள். பிரிக்க முடியாதது, உடலோடு சேர்ந்தே இருப்பது. உபாங்கம் என்பது ஒட்டியும் ஒட்டாமலும் இருக்கும். தேவையானால் தனியே பிரித்து விடலாம். சட்டை, அணிகலன் போன்றது. வேண்டாத போது கழற்றி வைத்துவிடலாம். பிரத்யங்கம் என்பது தனியாகப் பிரிந்தே இருப்பது - கட்டில், பீரோ, வீடு போன்றவை

கள். இதே போல் ஆன்மாவுக்கு சாங்கமாக இருப்பது அறிவு. உபாங்கமாக இருப்பது உடல். வினை முடிந்தவுடன் உடலை விட்டு ஆன்மா பிரிந்து விடுகிறது. பிரத்யங்கமாக இருப்பது உலகப்பொருட்கள் அனைத்தும்.

ஒருநாள் திடீரென்று வீட்டில் தீப்பிடித்துக்கொள்கிறது என வைத்துக்கொள்வோம். நாம் என்ன செய்வோம். வெளியே ஓடி வருவோம். அப்படி ஓடி வரும் போது, உடலுக்கு பிரத்யங்கமாக இருக்கும் கட்டில், பீரோ முதலியவற்றைவிட்டு விட்டு, தப்பிக்க இடையூருக அமைந்தால், உபாங்கமான சட்டை, அணிகலன்களைக்கூடக் கழற்றி எறிந்து விட்டு வெற்று உடலோடு வந்து விடுகிறோம். ஆனால் சாங்கமான கை, கால் உறுப்புகளுடன்தான் வருகிறோம். இதே போலத்தான், ஆன்மாவும், வினை முடிந்தவுடன் உபாங்கம், பிரத்யங்கமான உடல் மற்றும் வீடு, வாசலை விட்டு விட்டு; சாங்கமான அறிவோடு வெளியே சென்று விடுகிறதாம். பின்பு வேறொரு உடலில் புகுந்துகொள்கிறதாம். அறிவு உடன் செல்வதால் தான், பக்தி, தியானம், ஜோதிடம் போன்றவைகளைத் தக்க வயதில் யாரும் சொல்லித்தாராமலேயே சிலருக்கு ஆர்வம் வந்து, தானாகவே படித்தே அறிந்து செயல்படுத்தவும் முடிகிறது. இதுதான் முற்பிறவி வாசனை. விட்டகுறை தொட்ட குறை என்பதும் கூட இதைத்தான்: எருமைமாடு முதன்முதலில் மனிதப் பிறவி எடுத்தால் எப்படிப் படிக்கும்? சென்ற பிறவியில் அதற்கு படிப்பறிவு இல்லையல்லவா என்று வாரியார் சுவாமிகள் கூறுவார். கீதையில் பகவானும், "கர்மயோகம் செய்யும் போது பாதியில் விட்டுவிட நேர்ந்தாலும், அடுத்த பிறவியில் எந்தச் சூழ்நிலையில் பிறந்து இருந்தாலும், அவ்விடத்தில் அதன் தொடர்ச்சியைத் தருவதாகக்' கூறுகிறார். எனவே மறுபிறவி உண்டென்பது தெளிவாகிறது. தவிர, செய்கின்ற நல்வினை, தீவினைகளுக்கு ஏற்ப, பணக்காரனாகவும், ஏழையாகவும், நிம்மதியுள்ளவனாக்வும், துன்பத்தையே அனுபவிப்பவனாகவும் பிறக்கின்றோம் என்பதையும் அறிய வேண்டும். ஆகையால் அடுத்தப் பிறவி நன்ருக அமைய, இப்பிறவியை மேன்மையானதாக, தூய்மையானதாக வைத்துக்கொள்ளுதல் அவசியமாகிறது.



<u>தெரிந்து கொள்ளுங்கள் :</u>

## பஞ்சாக்ரம்

1. ஸ்தூல பஞ்சாக்ரம்.
நமசிவாய - இம்மை மறுமை பயன் அளிக்கும்.

2. சூக்ஷ்ம பஞ்சாக்ரம்.
சிவாயநம - மலத்தை (ஆணவ) நாசம் பண்ணும்.

3. காரண பஞ்சாக்ரம்.
சிவாய சிவ - பாசத்தைக் கெடுக்கும்.

4. மகா காரண பஞ்சாக்ரம்
சிவ - அருள் சிவத்தோடு சேர்ந்து இன்பம் தரும்.

5. மகா மநு
சி - சிவமேயாக்கும்.

இம்மந்திரங்களை குருமுகமாக முறையாக உபதேசம் பெற்றுக்கொள்ள வேண்டும்.



## அர்ஜுனனுக்கு கீதையில் அமைந்துள்ள பெயர்கள்

| | |
|---|---|
| அர்ஜுனன் | - தூய இயல்பு உடையவன் |
| பாண்டவன் | - பாண்டுவுக்கு மைந்தன் |
| தனஞ்ஜயன் | - அடைப்பட்டுக் கிடக்கும் செல்வத்தைச் சேகரிப்பவன் |
| கபித்வஜனன் | - குரங்குக் கொடியுடையவன் |
| குடாசேசன் | - துக்கத்தை வென்றவன் |
| பார்த்தன் | - பிரிதாவின் மைந்தன் |
| அனகன் | - பாபமற்றவன் |
| பரந்தபன் | - எதிரிகளை வாட்டுபவன் |
| கௌந்தேயன் | - குந்தியின் மைந்தன் |
| பாரதன் | - பாரத குலத்தில் உதித்தவன் |
| கிரீடி | - கிரீடம் தரித்தவன் |
| குருநந்தனன் | - குருகுலத்தின் தோன்றல் |
| ஸவ்யஸாசின் | - இடது கையால் அம்பு எய்பவன் |

-திரு. எஸ். நாராயணன்-மாடக்குளம்.



நாம் எந்தக் காரியத்தைத் தொடங்கினாலும், விநாயகரை (பிள்ளையாரை) வணங்காமல் தொடங்குவதில்லை. அத்துணை தெய்வ நம்பிக்கை நம் உடலோடு உள்ளத்தோடு உறைந்துள்ளது. பிள்ளையைப் பள்ளிக்கு அனுப்பினால் விநாயகர் வணக்கம்; காது குத்தினால் விநாயகர். நன்மையில் விநாயகர், திசையில் விநாயகர். இவ்வண்ணம் நமது வாழ்வில் என்றும், எங்கும் விநாயகர் கலந்திருக்கிறார்.

எடுத்த காரியம் எளிதாக இன்பமயமாக வெற்றிகரமாக முடிய வேண்டும் என்ற ஆசை அனைவருக்கும் உண்டு. அந்த ஆசையை நிறைவேற்றி வைக்கும் தெய்வ மூர்த்தம் விநாயகரே என்ற நம்பிக்கை ஒவ்வொருவர் உள்ளத்திலும் நிலைத்துள்ளது.

விநாயகரை எந்தத் திரு உருவிலும் எழுந்தருளச் செய்யலாம். ஒரு பிடி சாணம், மஞ்சள், வெல்லம் ஆகிய அனைத்திலும் எழுந்தருளச் செய்து எளிதில் வழிபடக்கூடிய கடவுள் விநாயகர். சிவபெருமான் விநாயகரை தம் கணங்களுக்கு அதிபதியாக்கி முடி சூட்டினார். கணங்களுக்கு அதிபதியாகையால், கணேசர், கணபதி என்ற பெயர்களும் விநாயகருக்கு வழங்கப்படுகின்றன.

க - ஞான நெறி, ந - மோட்சம், பதி-பரம்பொருள். ஞான நெறியில் நின்று எய்தப் பெறும் முழு முதலான பரம்பொருள் கணபதியாவார். தனக்கு வேறு தலைவனின்றித் தானே எல்லாவற்றிற்கும் தலைவனாய் விளங்குவதனால், கணபதியை விநாயகர் என்கிறோம். சிவ சக்திக்கும் பிள்ளையாதலால் பிள்ளையார் என்ற சிறப்புப் பெயரைப் பெற்றார். தன்னை வணங்கினோருக்கு விக்கினத்தை நீக்கு வராதலால் விக்கினேசர என்ற பெயரைப் பெற்றார்.

விநாயகரின் திருவுருவங்கள் எத்தனையோ பல தத்துவ நுட்பங்களை உணர்த்திக் கொண்டிருக்கின்றன. விநாயகரின் திருஉருவத்தில் நாபி பிரமனையும், முகம் திருமாலையும், முக்கண்கள் சிவபிரானையும், இடப்பக்கம் சக்தியையும், வலப்பக்கம் சூரியனையும் குறிப்பதாகப் பெரியோர் கூறுவர். விநாயகரின்

# விநாயகர்

ஐந்து திருக்கைகளில் உள்ள பொருட்களுள் பாசம் படைத்தலையும், அங்குசம் அழித்தலையும், ஒற்றைக்கொம்பு காத்தலையும், துதிக்கை மறைத்தலையும், மோதகம் அருளலையும் உணர்த்துவதாக நூல்கள் நுவலும். தேவர்க்குரிய பாதங்களைப் பெற்றுத் திகழ்கின்றார். ஆணும் பெண்ணுமாக அமைந்து திகழ்வது உலகம் என்பதனைச் சுட்டும் முறையில், ஒடிந்த தந்தத்தையுடைய இடப்பகுதி பெண் கூறாகவும் வலப்பகுதி ஆண் கூறாகவும் கொண்டு விநாயகர் விளங்குகின்றார்.

பூதமாய், தேவராய், விலங்காய், ஆணாய், பெண்ணாய், உயர்திணையாய், அஃறிணை





யாய் எல்லாமாக விளங்குபவர் விநாயகர். நாமே பார்க்க லாமே! விநாயகரின் திருமேனி இடையின் கீழே பூத உடம்பு. இடைக்கு மேலே கழுத்து வரை தேவ உடம்பு. தலையோ மிரு கத்தலை. ஒரு கொம்பு ஆண் தன்மை. கொம்பில்லாத பகுதி பெண் தன்மை. யானைத்தலை அஃறிணை. தெய்வ சரீரம் உயர் திணை. இவ்வாறு எல்லாம் ஆய திருவுருவம் விநாயக வடிவம். விநாயகருடைய செவி தாழ்ந்த செவி, முறம் போன் றது. சூர்ப்ப கர்ணர். பிற விப் பெருங்கடலில் வீழ்ந்து ஆழ்ந்து இடர்ப்படும் ஆன்மாக் களை அவருடைய திருவடியாக புணை பற்றியவுடன் முத்தி உறுதியாகின்றது.

விநாயகப் பெருமானைப் பெரும்பாலும் திருமணம் ஆகாத பிரம்மச்சாரி நிலையி னராகவே கருதுவர். எனி னும் விநாயகருக்கு வல்லபை என்னும் சக்தியை மனைவியாக நூல்கள் குறிப்பிடும். மற்றும் ஞானத் தெய்வமாகிய சித்தி புத்தி என்னும் இரு மனைவி யரை மணந்து கொண்டும், க்ஷேமம், லாபம் என்னும் இரு புதல்வர்களைப் பெற்றெடுத்துள் ளார் என்பர் பெரியோர். விநா யகரை நினைத்து வழிபடுவர் களுக்கு, நினைத்தது கைகூடும். அறிவாற்றல் ஓங்கும். இன்ப வாழ்வு நற்பேறுகளும் ஏற்படும் என்பதே இதன் கருத்தாகும்.

யாரும் விரும்பா வன்னி, அருகு, எருக்கு மலர் இவற்றை விரும்பி ஏற்று அருள் செய்ப வர் விநாயகர். தன்னை வழிப டுவர்களுடைய துன்பம் நீக்கி அருள்பவர். ஆகவேதான் 'வழி படும் அவர் இடர் கடி கணபதி' என்றூர் ஞானசம்பந்தர்.

விநாயகர் அறுவடைக்குரிய கடவுள் என்றும் அதுபற்றியே அறுவடைப்பயனை அழிக்கும் பெருச்சாளியை அடக்கி ஊர்தி யாகக் கொண்டுள்ளார் என்றும் கூறுவர். மேலும் கஜமுகா சூரன் சம்ஹாரத்தின் போது அவன் பெருச்சாளியாய் வந்த போது, அதனையே வாகன மாகக் கொண்டார் பிள்ளையார் என்று ஒரு புராணம் சொல்லு கிறது. பராசர ஆசிரமத்தை பாழ்படுத்திய கிரைஞ்சன் என்ற கந்தருவனான பெரிய எலியை அடக்கியதால் அதனையே வாக னமாகக் கொண்டுள்ளார் என்று மற்றொரு புராணம் கூறுகிறது.

விநாயகர் யானை மாதிரி இருக்கிறூர். அதற்கு நேர் விரோதமாக சின்னஞ்சிறு ஆகி ருதி உடையது பெருச் சாளி. மற்ற தெய்வ மூர்த் தங்களுக்காவது ஒரு மாடு, ஒரு குதிரை, ஒரு பறவை என்று வாகனம் இருக்கிறது. இவரோ எத்தனைக்கெத்தனை பெரிய சுவாமியாக இருக் கிறூரோ, அத்தனைக்கத்தனை சிறிய வாகனமாக வைத்துக் கொண்டிருக்கிறூர். வாகனத் துக்கு சிரமமில்லாமல், ஆனால் அதற்கு மரியாதை கௌர வம் எல்லாம் உண்டாகும்படி தம் உடம்பை வைத்துக்கொண் டிருக்கிறூர். ஸ்தூல காய ரான போதிலும் பக்தர்கள் இத யத்தில் கனக்காமல் இலேசாக இருப்பேன் என்று காட்டுகிறூர் கஜானனர்.

ஒவ்வொரு பிராணிக்கும் ஒவ் வோர் அங்கத்தில் அதிக கௌர வம் - பற்று - இருக்கும். கவுரிமா னுக்கு கௌரவம் முடியில், மயி லுக்கு தோகை என்பதுபோல், யானை தன் தந்தத்தைத் தீட்டி வெள்ளை வெளேர் என்று வைத்திருக்கும். ஆனால், இந்த பிள்ளையார் என்ற யானையோ தன் கொம்புகளில் ஒன்றையே ஒடித்து அதனால் மஹாபார தத்தை எழுதிற்று. தன் அழகு, கௌரவம் கர்வம் எல்லாவற் றுக்கும் காரணமாக இருக் கின்ற ஒன்றைக் காட்டிலும், தர்மத்தைச் சொல்லுகின்ற ஒன் றுதான் பெரிது என்பதை, இவ்விதம் இந்த யானை-பிள் ளையார் காட்டியது. வித் தைக்காக எதையும் தியாகம் பண்ண வேண்டும் என்பதைத் தானே, தன் தந்தத்தையே தியா கம் பண்ணிக்காட்டியிருக்கிறூர்!

விநாயக சதுர்த்தி - விநாயக ஜயந்தி- விநாயக பக்தர்களுக்கு மட்டும் உரியதன்று, சைவர்க ளுக்கு மட்டும் உரியதன்று; இந் துக்களுக்கு மட்டும் உரியதன்று - பரந்த விசாலமான அன்பு மயமான உள்ளம் படைத்தவர் கள் அனைவருக்குமே உரித்தா

கும். உட்பொருளை உள்ளபடி உணர்ந்து கொண்டால், கண பதி தத்துவம் உள்ளத்தைத் தொட்டு அருள் புரியும். இதற்கு அறிவு மட்டும் போதுமா? அன் பும் நம்பிக்கையும் கலந்த பக்தி வேண்டும். அப்போதுதான உள் ளத்தில் உவகை பிறக்கும்!

கணபதிதானைக் கருத்திடை
வைப்போம்;
குணமதிற் பலவாம்; கூறக்கேளீர்;
உட்செவி திறக்கும்; அகக்கண்
ஒளிதரும்;
அக்கினி தோன்றும்; ஆண்மை
வலியுறும்;
திக்கெலாம் வென்று ஜெயக்கொடி
நாட்டலாம்.
—பாரதியார்.

திருமதி. கமலா மாரியப்பன் - கோவை.

* * *

☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆

# விக்நேஸ்வரரும் செவ்வாய்க்கிழமையும்

திரு. பாஷ்யம் சேஷாத்ரி - சென்னை.

பாரத்வாஜ முனிவர் நருமதை நதியில் நீராடச்சென்றூர். அங்கு நீராட வந்த பெண்ணைக் கண்டு காமம் கொண்டார். நிலை தடுமாறினார். அழுக்குகள் வெளிப்பட்டு நிலத்தில் விழுந்தன. 'மனம் தடுமாறி தவறு செய்துவிட்டோமே' என்று வருந்தி, நதியில் மீண்டும் நீராடிவிட்டுத் தன் ஆச்ரமத்தை சென்று அடைந்தார்.

அழுக்குகள் விழுந்த நிலத்திலிருந்து அழகான ஆண் குழந்தை ஒன்று உருவாகியது. பூதேவி, அந்த குழந்தையை எடுத்துக் கொண்டு முனிவரை அடைந்தார். மகனை ஏற்றுக்கொண்டார் பாரத்வாஜ முனிவர்.

குழந்தை செந்நிறத்தையுடையவனாக இருந்ததால் 'அங்காரகன்' என்றும், நிலத்திலிருந்து தோன்றியதால் 'நிலமகன்' என்றும் பெயர் சூட்டினார்.

அங்காரகன் கலைகள்அனைத்தையும் கற்றறிந்தான். தவம் மேற்கொள்ள காட்டை அடைந்தான். விநாயகரை துதித்துக் கடுந்தவம் பூண்டான்.

உளம் மகிழ்ந்த விக்நேஸ்வரர், நிலமகன் முன் தோன்றி, 'யாது வரம் வேண்டும்?' என்று கேட்டார்.

"பெருமானே! எப்பொழுதும் உங்களை நினைக்க வேண்டும். என்றும் உங்களை துதிக்க வேண்டும். தேவர்களுடன் நான் அமுதம் உண்ண வேண்டும். மற்ற கிரகங்களுடன் நான் சேர்ந்திருக்க நீ அருள வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக, நான் பிறந்த செவ்வாய்க்கிழமை அன்று, விக்னம் நீக்கிடும் உங்களை துதிப்போர்க்கு, தீவினைகளைப் போக்கி, நன்மை பல நீ அருள வேண்டும்," என்று அங்காரகன் வேண்டினான்.

விநாயகர் அவன் கேட்ட வரமளித்தார். அன்று முதல், அங்காரகன் பிறந்த நாளான செவ்வாய்க்கிழமை, பிள்ளையார் வழிபாட்டிற்கு உகந்த நாளாயிற்று. அதுவும், செவ்வாய் அன்று வரும் சதுர்த்தி மிக்க விசேஷமடைந்தது. அன்று விரதம் இருப்போருக்கு சங்கடங்கள் நீங்குகின்றன.



# மலைகள் நிற்கும் வரை... ஆறுகள் ஓடும் வரை...

திரு. சக்திக்கொடி - சேலம்.

இறைவன் அளவற்ற அருளாளன். எல்லையற்ற ஆற்றல் கொண்டவன் என்பது அவனுடைய பக்தர்கள் தெளிவாக அறிந்திருக்கின்றனர். இருப்பினும் சிலருக்குச் சில சமயங்களில் ஒன்றிரண்டு சந்தேகங்கள்...

அளவற்ற வலிமை கொண்ட இறைவன் பூமியில் ஒரு சிலர் செய்யும் சின்னஞ்சிறு தவறுகளுக்கு (இறைவன் கண்களில் பார்த்தால் அவை மிகச் சிறியவைதான்) தண்டனை வழங்க அவனே வரவேண்டுமா? அதுவும் பல்வேறு வடிவம் தாங்கி வரத்தான் வேண்டுமா? - இப்படிச் சந்தேகங்கள் எழுகின்றன.

இறைவன் தவறு செய்வர்களைத் தண்டிக்க மட்டும் பூமிக்கு வருவதில்லை. அவன் விரும்பினால், இருந்த இடத்திலிருந்தே அல்லவைகளை அழித்தொழிக்க அவனால் முடியும். இறைவனின் எண்ணம் வேறு.

எத்தனையோ மகான்கள் இந்துப் பூமியில் தவம் செய்து, தியாகங்கள் செய்து, தம்மை வருத்திக் கொண்டு புண்ணிய பூமியாக மாற்றி வருகின்றனர். அவனைக்காண வேண்டும் என்று அல்லும் பகலும் பாகாய் உருகிக்கொண்டு இருக்கிறார்கள். இறைவன், கெட்டவர்கள் தனக்குத் துன்பம் செய்தால், தன்னை இழித்துப் பேசினால்கூடப் பொருட்படுத்துவதில்லை. தனது பக்தர்களான புண்ணியவாளர்களுக்குக் கெடுதல் ஏதேனும் நேர்ந்தால் பொறுத்துக்கொண்டு சும்மா இருந்து விடுவதில்லை. துஷ்டர்களை அழித்து நல்லவர்களைக் காப்பாற்ற முயல்கிறான்.

அல்லவர்களிடமிருந்து நல்லவர்களைக் காத்து அடைக்கலமாக அவர்கள் நிற்க நிழலாக இருக்கத்தான் இறைவன் பூமியில் திருவவதாரங்கள் எடுக்கிறான்.

நீதி நெறிகளின் முக்கியத்துவத்தை உணர்த்த இறைவன் அவதாரங்கள் எடுக்கிறான். தன் குடும்பத்தினருடன் ஒருவன் எப்படி நடந்துகொள்ள வேண்டும்? அவன் என்ன கடமைகளைச் செய்ய வேண்டும்? பெற்றோருக்கு, சமூகத்திற்கு, இளையோருக்கு அவன் என்னவெல்லாம் செய்யவேண்டும்? என்பன போன்றவற்றை உலகினருக்கு உணர்த்தத்தான் இறைவன் பூமியில் தோன்றுகிறான். புனிதம் மிக்க இராமாயண நூலில், இறைவன் மனித வடிவில் சொல்லுவதும் இதைத்தான். இறைவனைப் பூமியில் அவதாரம் செய்யச் செய்த மனிதர் யாரோ அவருக்குத் தமது நன்றியைச் சொல்ல விரும்புவதாக ஸ்ரீதியாகராஜர், தமது கீர்த்தனையில் பாடுகிறார்.

துன்பங்கள் மலையெனத் தோன்றும் பொழுது, மனிதன் எப்படி ஒழுங்காக, தருமமான வாழ்க்கையை நடத்த வேண்டும் என்பதை இராமாயணம் கூறுகிறது.

வேதங்களில் விலைமதிக்க இயலாத கருத்துக்கள் வழங்கப்பட்டுள்ளன. இராமாயணம், அந்த அரிய கருத்துக்களை எளிமையாக, தேன் பூசிய மருந்தாக, அழகான கவிதைகளில் வழங்குகிறது.

மலைகள் பூமியில் நிற்கும் வரை, தரையில் ஆறுகள் ஓடும் வரை இராமாயணம் மனிதரின் உள்ளங்களில் உதடுகளில் நிலைத்து நிற்கும்.

( திரு. ஆர். ஆராவமுதனின் சொற்பொழிவிலிருந்து.)

## சப்த தியாக ஸ்தலங்களும் நடனங்களும்

| | | |
|---|---|---|
| திருவாரூர் | வீதி விடங்கர் | அசபா நடனம் |
| திருநள்ளாறு | நகர விடங்கர் | உன்மத்த நடனம் |
| திருநாகை | சுந்தர விடங்கர் | அலை நடனம் |
| திருவாய்மூர் | நீல விடங்கர் | கமல நடனம் |
| திருமறைக்காடு | புவனி விடங்கர் | அமிர்த நடனம் |
| திருக்கோளிலி | அவனி விடங்கர் | பிரமா நடனம் |
| திருவொற்றியூர் | மாணிக்க விடங்கர் | வகுள நடனம் |

தொகுத்தவர் : கமலா மாரியப்பன் - கோவை.



(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

ஆறாம் அத்தியாயம்

## தியான யோகம்

உமைப்ரியன்

பகவான் கூறுவது :

அஸம்சயம் மஹாபாஹோ மனோ
துர்நிக்ரஹம் சலம் ।
அப்யாஸேன து கௌந்தேய
வைராக்யேண ச க்ருஹ்யதே ।। (35)

“பரந்த தோள்களை உடையவனே! மனம் கட்டுக்கள் அடங்காதது; அலையும் தன்மை கொண்டது. இதில் சிறிதும் சந்தேகம் இல்லை. ஆயினும், குந்தியின் மகனே! சிறந்த பயிற்சியாலும்,. உறுதியாலும் அதனை (மனதை) அடக்கலாம்.”

[போதைப்பொருட்களுக்கு ஒருவன் அடிமையாகிவிட்டிருந்தால் அவனுக்குள் ஓர் ஊசிமூலம் மருந்து கொடுத்து அவனைத் திருத்திடமுடியாது. அப்படி ஒரு தீர்வு இருந்தால், பல இளைஞர்களை நாம் காப்பாற்றிவிடலாம். ஆனால் சிறந்த மனோ உடல் பயிற்சி, அறிவினால் ஏற்படும் சிறந்த உறுதி ஆகியவற்றால் மட்டுமே போதைப்பொருளுக்கு அடிமையானவனை நிரந்தரமாகத் திருத்திடமுடியும். தொடர்ந்த பழக்கத்தால் - பயிற்சியால் ஒருவன் தன் இயல்பை மாற்றிக்கொள்ள முடியும். இந்தப் பயிற்சியை இறைவனைப் பற்றிய எண்ணங்களில் ஒருமுகப்படுத்தி மேற்கொள்வானாயின், மனமானது மற்றைய விஷயங்களில் செல்லாது கட்டுப்படும். அதே போன்றது உறுதி எனும் மனப்பான்மையுமாகும். இதனை ஒருவன் தனது அறிவு கொண்டு பெற முடியும். புலனின்பங்களினால் ஏற்படும் இன்னல்களை அறிவுகொண்டு தீர்மானித்தறிந்து உள்ளத்தையும், உடலையும் அலைபாயவிடாது, ஒருவன் உறுதியுடன் தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் கொள்ள முடியும். புகைப் பிடித்தல், மது அருந்துதல் போன்ற தீமை பயக்கும் பழக்கங்களுக்கு அடிமையானவர்களை இந்தத் தீவிர பயிற்சியும் மன உறுதியுமே காப்பாற்றுவதற்குரிய இறுதி நம்பிக்கையாகும்.]

அஸம்யதாத்மனா யோகோ
துஷ்ப்ராப இதி மே மதி:
வச்யாத்மனா து யததா
சக்யோ அவாப்துமுபாயத: ।। (36)

“மனதை அடக்கத்தெரியாதவன் யோகம் என்பதை பெறமுடியாது என்பது என் எண்ணம். மனதை அடக்கிச் சிறந்த வழிமுறைகளைப் பின்பற்றுபவனால் மட்டுமே அதை (யோகத்தை) பெறமுடியும்.”

[இச்செய்யுளில் பகவான் மனிதனின் முன்னேற்றத்திற்கு மனமே முக்கிய காரணம் என்று அறுதியிடுகின்றார். ஒருவனது வீழ்ச்சியும், உயர்ச்சியும் அவனவன் மனதைப் பொறுத்து விளங்குகின்றது. இங்குச் சிறந்த வழிமுறைகள் என்பன, முற்செய்யுளில் குறிப்பிட்ட பயிற்சியும், மன உறுதியுமேயாகும்.]

அர்ச்சுனன் கூறுவது :

அயதி: ச்ரத்தயோபேதோ
யோகாச்சலிதமானஸ: ।
அப்ராப்ய யோகஸம்ஸித்திம் காம்
கதிம் க்ருஷ்ண கச்சதி ।। (37)

“ஈடுபாடு கொண்டவனாயினும் முயற்சி குறைந்ததால் யோகத்தினின்று தன் மனதை திசை திருப்பியபோது, அவன், யோகம் கைகூடாது எந்த நிலையைப்பெறுகிறான், கிருஷ்ணா?”

[யோகமானது, யோகப்பயிற்சியானது நன்மைகள் பயக்கும் என்பதை தெரிந்து வைத்துக் கொண்டும் அதனைப் பெறுவதற்குரிய முயற்சியினை சரிவர, முழு அளவில் மேற்கொள்ளாத போது அவன் கடைசியில் எந்த கதியை நிலையை அடைகின்றான் என்ற வினாவை அர்ச்சுனன் எழுப்புகிறான்.]

கச்சின்னோபயவிப்ரஷ்டஸ்
சின்னாப்ரமிவ நச்யதி ।
அப்ரதிஷ்டோ மஹாபாஹோ
விமூடோ ப்ரஹ்மண: பதி ।। (38)

“அகன்ற தோள்களை உடையோனே! பிரம்ம ஞானத்தைப் பெறும் நெறியிலே (வழியிலே) மோகத்திற்கு உள்ளாகும் போது அவன் எந்தவிதமான ஆதரவின்றி, இரண்டிலிருந்து விலகி கலைந்து விட்ட மேகம்




போல் அழிந்து போகின்றான் அல்லவா?' '

[வானத்தில் மேகங்கள் கருத்து ஒன்று சேர அமையும் போதுதான் மழை பொழிகின்றது. அவ்வாறு இல்லாமல் அம்மேகம் சிதறிச் சிறு சிறு பகுதிகளாகப் பிரிந்த நிலையில் அவற்றால் மழை பெற முடியாது. அதுபோன்று, பிரம்ம ஞானத்தைப் பெறும் முயற்சியில், ஐம்புலன்கள் பற்றினால் தன்னை இழந்து, மனதைச் சிதறச் செய்வானாயின் அவன் தன் வினைப் பற்றிலிருந்து தவறி, பூவுலக இன்பத்தையோ, வானுலக பேரின்பத்தையோ பெறமுடியாது. இது போது அவன் நிலை மிகவும் பரிதாபகரமானது.]

ஏதன்மே ஸம்சயம் க்ருஷ்ண
சேத்துமர்ஹஸ்ய சேஷத: ।
த்வதன்ய: ஸம்சயஸ்யாஸ்ய
சேத்தர ந ஹ்யுபபத்யதே ।। (39)

"கிருஷ்ணா, எனக்கு ஏற்பட்ட இந்த சந்தேகத்தை முழுவதுமாக தீர்க்கத் தகுந்தவர் நீங்கள்தாம். உங்களாலன்றி வேறு யாராலும் இந்த சந்தேகத்தைத் தீர்த்து வைக்கமுடியாது."

[இயற்கையைப் பற்றி - இறைவனைப் பற்றிய சந்தேகங்களை அந்த இறைவன்தான் நீக்க முடியும். ஏனென்றால் சந்தேகத்தை எழுப்பதுவதும் அவனே, தீர்ப்பதும் அவனே. ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள தொடர்பின் பெருமையை இறைவன் மட்டுமே அறிந்துள்ளான். மனிதனின் மனப்போக்கும், அவனுக்குத் தேவையானதும் இறைவன் நன்கு தெரிந்து வைத்துள்ளான். நோய் ஏன் வந்தது, அதனை எப்படித் தீர்ப்பது என்னும் அரிய கலையை தெரிந்த கலைஞன் இறைவனாவான். இதனால் இச்செய்யுளில் இறைவனின் வல்லமை சுட்டிக்காட்டப்படுகிறது.]

### பகவான் கூறுவது :

பார்த்த நைவேஹ நாமுத்ர
விநாசஸ்தஸ்ய வித்யதே ।
ந ஹி கல்யாணக்ருத்கஸ்சித்துர்
கதிம் தாத கச்சதி ।। (40)

"பார்த்தா (அர்ச்சுனா) அவனுக்கு (முயற்சியில் தவறியவனுக்கு) இப்பிறவியிலோ மறு பிறவியிலோ அழிவு என்பது கிடையாது. நன்மை செய்யும் யாரானாலும் அவன் இழி நிலை அடைவதில்லையப்பா."

[சிறிதே நன்மை செய்து, சிறிது நாட்களே நல்லவனாக இருந்தாலும் பெரிதும் தீமைகள் செய்து, அதிக நாட்களாக தீயவனாக விளங்கும் ஒருவன் அடையும் நிலையே அவனும் அடைவான் என்ற ஒரு நியதி இருந்தால், மனிதனுக்கு வாழ்க்கையில் நம்பிக்கையோ, பிடிப்போ, உயர்ச்சியோ, சிறப்போ இருந்திருக்காது. கடலின் ஆழத்திற்குச் செல்லும் அளவு அரிய பொருட்கள் கடலடியில் கிடைத்திடும். ஆகவே நல்லன சிறிதே செய்தாலும் அதற்குத் தகுந்

தவாறு நிலையும் உயரும். துரியோதனன், கர்ணன், இராவணன் போன்றோர் தீமைகளின் உருவமாக, தீமைகளுக்கு நண்பர்களாக விளங்கினாலும், அவர்களிடம் குடி கொண்ட சில, பல நற்பண்புகளே அவர்களை பல நேரங்களில் தனித்து உயர்த்திக்காட்டுகின்றன. எனவே சிறிது நன்மை செய்தாலும் சிறு பொழுது நல்லவர்களாக விளங்கினாலும் அவர்களை சமுதாயம் தள்ளிவிடாது. அவன் அழிவதில்லை.]

*ப்ராப்ய புண்யக்ருதாம் லோகாநு*
*ஷித்வா சாச்வதீ: ஸமா: ।*
*சுசீனாம் ஸ்ரீமதாம் கேஹே யோக-*
*ப்ரஷ்டோ அபிஜாயதே ।। (41)*

"யோகத்தை விட்டவன் (யோகப் பயிற்சியை பாதியில். கைவிட்டவன்) புண்ணியம் செய்தவர்கள் வாழும் உலகத்தை அடைந்து, அங்குப் பல நாட்கள் வாழ்ந்து, செல்வம் நிரம்பப் பெற்ற நல்லவர்களுடைய வீட்டில் பிறவி எடுக்கின்றான்."

[மண்ணுலக வாழ்க்கையை விரும்பும் சிற்றின்ப நெறியும், விண்ணுலகப் பேற்றினைப் பெற விரும்பும் பேரின்ப நெறியும் என்றும் ஒன்று சேரா. அது இரு குதிரையில் ஒருவன் சவாரி செய்யும் நிலை. சிற்றின்பத் தாக்கத்தால் பேரின்ப நெறி மாசுபடுகின்றது. பேரின்ப நெறியினை பெறுவதற்கான யோகப் பயிற்சியில் ஒருவன் ஆசை, காமம் போன்ற உணர்வுகளால் தடுக்கப்படலாம். அதுபோது அவன் இறுதியில் முக்தி எனும் பிறவா நிலை பெறாது போகலாம். ஆனால் அவனுடைய சிற்றின்ப வேட்கை தீர, அவன் சுவர்க்கத்திற்குச் சென்று இன்பம் அனுபவித்து பிறவி எடுத்து, நல்ல உயர்ந்த, புனிதமான செலவந்தர் குடும்பத்தில் பிறந்து தன்னுடைய சிற்றின்ப ஆசைகளைத தொடர்ந்து துய்க்கவே செய்கின்றான். யோகத்தைப் பாதியில் விட்டவனுக்கு எப்படி சுக வாழ்வு பெற முடிகிறது என்ற கேள்வி எழலாம். ஆனால் யோகத்தைக் கற்கத்தொடங்கும் போதே அவன் சாதாரண மனித நிலையிலிருந்து தன் இயல்பை உயர்த்திக் கொள்ளவே செய்கின்றான். மனமும் அறிவும் அடியோடு மாசுபடுவதில்லை. சிறிது மாசுபட்டாலும், அவனுடைய அடிமனம் தூய்மையானதாகவே விளங்குகிறது. அதுபோது, அந்தத் தூய்மை நிலைக்கு ஏற்றவாறு அவனுடைய வினைப் பயன்களுக்கு ஏற்றவாறு மறுபடியும் பிறவி எடுக்கின்றான். ஆகவே யோக நெறி தவறியவன் அடியோடு அழிவதில்லை. உயரவே வாய்ப்பு அளிக்கப்படுகிறது. சுவாமி விவேகானந்தர் நல்ல பணக்காரக் குடும்பத்தில் பிறந்து பின்னர் துறவி வாழ்க்கை கொண்டு .யோக புருஷராகவும் விளங்கியது இங்குக் குறிப்பிடத்தக்கது.]

*அதவா யோகினாமேவ*
*குலே பவதி தீமதாம் ।*
*ஏதத்தி துர்லபதரம் லோகே*
*ஜன்ம யதீத்ருசம் ।। (42)*

"(முன் செய்யுளின் கருத்து தொடர்கிறது.) அல்லது (யோகப் பயிற்சியை பாதியில் கைவிட்ட அவன்) அறிவு நிரம்பப்பெற்றுள்ள யோகிகளின் குலத்தில் பிறக்கிறான். இத்தகைய பிறவியை நிச்சயமாக இந்த உலகததில் எளிதாக பெறமுடியாது."

[யோகப் பயிற்சியை தொடர்ந்து மேற்கொள்ளாதவன இப்பிறவியில இழிவாக வாழமாட்டான என்று கூறி மறு பிறவியில் சான்றோர பிறந்த குலத்தில் பிறப்பதாக பகவான உறுதி கூறுகின்றான். செல வந்தர் வீட்டிலவிட அறிவுடையோர் வீட்டில பிறப்பர என்று கூறுகின்றார். அதாவது பணத்தைக் காட்டிலும், அறிவுடைய குடும்பம் எளிதில் ஒருவனை மேன்மையாக்குகிறது என்பதை பகவான் சுட்டிக்காட்டுகிறார்.]

*தத்ர தம் புத்திஸம்யோகம்*
*லபதே பௌர்வதேஹிகம் ।*
*யததே ச ததோபூய: ஸம்ஸித்தௌ*
*குருநந்தன ।। (43)*

"குருநந்தனா! இதனால் (அறிவுடையார் குலத்தில் பிறப்பதால்) முந்தைய பிறவியில் பெற்ற யோகப்பயிற்சி அறிவை (இப்பிறவியில்) மறுபடியும் பெறுகின்றான். முக்தி பெறும் பயனைப் பெறுவதற்காகத் தொடர்ந்து அதிக அளவில் அவன் முயற்சிகளை மேற்கொள்கின்றான்."

[குரு குலத்தில் பிறந்ததால் அர்ச்சுனன் இங்கு பகவானால் 'குருநந்தனா' என்று அழைக்கப்பெறுகின்றான். சிற்றின்ப மோகத்தால் தன் யோகப்பயிற்சியின் இடையில் தடுமாற்றம் கொண்டவன், அடுத்தப் பிறவியில், ஒருகாலத்தில் பயிற்சி கொண்டதன் பயனாக, ஒரு யோகியின் குடும்பத்தில் பிறக்கின்றான். அவ்வாறு பிறக்கும் போது, அக்குடும்பத்தில் யோகியர் மேற்கொள்ளும் பயிற்சிகளை, முறைகளைப் பார்த்திடும் போது, அவனுக்கு முற்பிறவியில் அவன் ஒரு சிறிது காலம் கொண்ட யோகப்பயிற்சி பற்றிய சிந்தனைகள் அவனுள் உருவாகின்றன. ஆக, உள்ளத்தில் யோகத்தைப் பற்றிய சிந்தனை

யும், வெளியில் யோகத்தைப் பற்றிய சூழ்நிலையும் ஒன்றிடும் போது, அவன் இப்பிறவியில் இன்றும் முறையாக, தீவிரமாக யோகப்பயிற்சியை மேற்கொள்கின்றான். இதற்கு யோகியர் குடும்பத்தில் பிறந்து சிறந்த யோகியாக விளங்கிய ஸ்ரீராம கிருஷ்ணபரம ஹம்ஸரை உதாரணமாகக் கொள்ளலாம்.]

*பூர்வாப்யாஸேன தேனைவ*
*ஹ்ரியதே ஹ்யவசோ அபி ஸ: ।*
*ஜிக்ஞாஸு॰ரபி யோகஸ்ய*
*சப்தப்ரஹ்மாதிவர்த்ததே ।। (44)*

"தன்னுடைய முயற்சி இல்லாது, முற்பிறவியில் மேற்கொண்ட பயிற்சியின் உறவினால் அவன் (யோகப் பயிற்சியை இடையில் விட்டவன்) யோகப் பயிற்சிக்கு இழுக்கப்படுகிறான். யோகத்தில் ஆராய்ச்சி செய்யும் சாதாரணமானவன்கூட வேதத்தைக் கடந்தவனாக விளங்குகின்றான்."

[இச்செய்யுளில் வேதம் சொல்லும் வழியில் நின்று வினையாற்றுபவரைவிட, யோக நெறியை மேற்கொள்ளும் சாதகனே சிறந்த வாழ்க்கையை உடையவனாகக் கருதப்படுகிறான் என்பது பகவானால் கூறப்படுகிறது. நன்றாகப் படித்து தேர்வு எழுத வேண்டும் என்று எண்ணும் மாணவன் சிறந்தவன்தான். ஆனால் அந்த எண்ணத்தை தகுந்த முயற்சி கொண்டு செயல்படுபவன் அவனைவிட சிறந்தவனாவான். இவ்வகையில் வேதங்களைக் கற்றுக்கொள்ளும் பண்டிதர்கள் - அறிஞர்கள் அவை கூறிய வினை வழியில் நின்று முக்குணங்களான ரஜஸ், தமஸ், சாத்வீகம் எனும் இயற்கை கொண்டு விளங்கும் உணர்வுகளில் உழன்று, தொடர்ந்து பிறவிப்பிணியில் வருந்துவர். அவர்களைக் காட்டிலும் விரைவான முக்தியைத் தரும் யோகப்பயிற்சி மேற்கொண்டு திகழும் ஆராய்ச்சியாளன் சிறந்தவன். ஆராய்ச்சி மேற்கொள்ளும் மாணவன் பலவாறு பலமுயற்சிகளை மேற்கொள்ளுகிறான். அம்முயற்சிகளே அவனைச் சிறந்த யோக புருஷனாகத் திகழச்செய்கிறது.]

*ப்ரயத்னாத்யதமானஸ்து யோகீ*
*ஸம் சுத்தகில்பிஷ: ।*
*அநேகஜன்மஸம்ஸித்தஸ்ததோ*
*யாதி பராம் கதிம் ।। (45)*

"கடுமையான முயற்சிகளை மேற்கொள்ளும் யோகியானவன் (யோக சாதனையில் தேர்ச்சிப் பெற்றவன்) பாபங்கள் அற்றவனாய், புனிதனானவனாய், எடுக்கும் பல பிறவிகளில் முதிர்ச்சி அடைந்து முக்தி எனும் பேற்றினை அடைகின்றான்."

[கல்விக்காகவும், பொருளுக்காகவும் ஒருவன் எவ்வாறு சீரான தீவிர முயற்சிகளை தன் வாழ்க்கையில் செய்கின்றானோ, அதே போன்று, அக்கல்வி மற்றும் பொருளைவிட யோகத்தை- யோகப்பயிற்சியை மேற்கொள்ள வேண்டும். ஏனென்றால் கல்வியும் பொருளும் தராத முக்தி எனும் இறுதி இன்பத்தை, மனிதனின இறுதி விருப்பத்தை யோகம் பெற்றுத் தருகின்றது. இத்தகு ஆற்றல்மிகு யோகத்தை ஒருவன் தன் ஒவ்வொரு பிறவியிலும் முயன்று அடைய முயல வேண்டும். அவனே யோகி என்று போற்றப்படுகின்றான்.]

*தபஸ் விப்யோ அதிகோ யோகீ*
*ஞானிப்யோஅபி மதோ அதிக: ।*
*கர்மிப்யஸ்சாதிகோ யோகீ*
*தஸ்மாத்யோகீ பவார்ஜுன ।। (46)*

"தவம் செய்யும் முனிவர்களை விட யோகி மிகவும் மேலானவன். கல்வி அறிவு நிரம்பிய அறிவாளிகளைவிட யோகியானவன் சிறந்தவனாகக் கருதப்படுகிறான். வினையாற்றுபவர்களை விட (யோகி) மேலானவன். ஆகவே, அர்ச்சுனா, நீ சிறந்த யோகியாக விளங்குவாயாக."

[வெறும் வேதங்களைப்பற்றிய அறிவு பெற்றிருப்பதால் மட்டும் பயனில்லை. அவ்வேதத்தில் அறிவுறுத்தியபடி நடக்க முயற்சிப்பதே நன்மை தரும். ஆம் யோகத்தைப் பற்றிய சாத்திர அறிவு பெற்றவனைவிட அதைப் பயிற்சி மூலம் மேற்கொள்பவனே சிறந்தவனாவான். இந்த யோகப் பயிற்சியை மேற்கொண்டு, அதனை இடையில் மேற்கொள்ளாது விளங்கும் 'யோகப் பிரஷ்டன்' என்பவன், இம்மை மறுமை இன்பங்களை எளிதாகப்பெறுகின்றான். சாதாரணமாக யோகத்தை மேற்கொள்பவனது மனமும், அறிவும் மேம்பட்டு விளங்குவதால்

அவன் விரும்பும் எதனையும் எளிதாக, விரைவாகப் பெறுகின்றான். யோகத்தில் முழு வெற்றியடைந்தவன் முக்தி எனும் பேரின்பம் ஒன்றினையே பெறுகின்றான். யோகத்தை இடையில் கைவிட்டவன், பூவுலக இன்பம், மேலுலக இன்பம் ஆகிய இரண்டினையும் பெறுகின்றான் என்று பகவான் மீண்டும் மீண்டும் வலியுறுத்துகின்றார். இந்த அறிவுரை அர்ச்சுனன் இருக்கும் குழப்பமான, நம்பிக்கையில்லாத தருணத்தில் மீண்டும் மீண்டும் கூறப்படுவதால், அர்ச்சுனன் சிறிது சிறிதாக அமைதியினையும் ஒருமுனைப்பினையும் பெறுகின்றான்.

இதனைத்தான் பகவான் எதிர் பார்க்கின்றார்.]

யோகினாமபி ஸர்வேஷாம்
மத்கதேனாந்தராத்மனா ।
ச்ரத்தாவான்பஜதே யோ மாம்
ஸ மே யுக்ததமோ மத: ॥ (47)

"யார் ஒருவன் உறுதியுடன் அறிவை என்னிடம் வைத்து என்னை வழிபடுகின்றானோ - நினைக்கின்றானோ, அவனே யோகியர்க்குள் மிகவும் சிறந்தவனாவான் என்பது என்னுடைய எண்ணமாகும்."

[எல்லோரும் இலட்சியத்துடன் அல்லது குறிக்கோளுடன்தான் தன் முயற்சிகளை, கடமைகளை மேற்கொள்ள வேண்டும். அக்குறிக்கோள்கள் உயர்ந்தனவாக இருந்திடும்போது, அவன் வாழ்வும், அவனைச் சார்ந்த சமுதாயமும் உயர்ந்தனவாக அமையும். தியானத்தை மேற்கொள்ளும் யோகிகள், ஞானிகள் யாவருமே சிறந்தவர்கள் தாம். தாங்கள் விரும்பும் எதனையும் அவர்கள் எந்தவிதத் தடையுமின்றிப் பெறுகிறார்கள். ஆனால் ஒருசில இம்மண்ணுலக சுகங்களுக்காக யோகத்தை தியானத்தை மேற்கொள்வதைவிட, அந்த இறை உணர்வு ஒன்றினை மட்டுமே அறிவாலும், மனதாலும் கொண்டு தியானத்தை மேற்கொள்பவர்கள் இறுதியில் அந்த இறைவனையே அடைகிறார்கள். இறைவனை அடைவதைவிட இந்த உலகத்தில் அடையப்பெறும் பேறு வேறு ஏதும் இல்லை.]

(முடிவுறும் இந்த ஆறு அத்தியாயங்களில் ஜீவாத்மாவின் நிலை விவரிக்கப்பட்டு, அந்த ஜீவாத்மா மேன்மையுறுதற்குரிய பாங்கும் சொல்லப்பட்டது. ஜீவாத்மா பரமாத்வாவிடம் சேர வழிவகுக்கும் உறவாக பக்தியானது செயல்படுகிறது. அடுத்துவரும் ஆறு அத்தியாயங்களில் பரமாத்மாவின் நிலை விளக்கப்பட உள்ளது. பக்தியின் மேன்மையும் கூறப்படுகிறது.]

இதிஸ்ரீமத் பகவத் கீதாஸூபநிஷத்ஸு
ப்ரஹ்மவித்யாயாம் ।
யோக சாஸ்த்ரே
ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே
த்யானயோகோ நாம
ஷஷ்டோ அத்யாய: ॥

"பிரம்மஞானததைக் கூறுவதும், யோக சாததிரததைக் கூறுவதும், கிருஷ்ணனுக்கும் அர்ச்சுனனுக்கும் இடையே நடைபெறும் உரையாடலுமாகவும் உள்ள பகவத்கீதை எனும் உபநிடதத்தில் உள்ள தியான யோகம் என்ற ஆறும் அத்தியாயம் (முடிவுற்றது.)

(தொடரும்)



## பகவானுக்குக் கீதையில் அமைந்துள்ள பெயர்கள்!

| | |
|---|---|
| ஹ்ருஷீகேசன் | - இந்திரியங்களுக்கு ஈசன் |
| அச்சுதன் | - தன் நிலையினின்று வழுவாதன் |
| கிருஷ்ணன் | - கருப்பு நிறமானவன். அழுக்கைப் போக்குபவன். மும்மூர்த்தி சொருபம். பிரம்ம சொரூபம். அடியார் படும் துயரம் துடைப்பவன் |
| கேசவன் | - அழகிய முடியுடையவன், மும்மூர்த்திகளை வசமாய் வைத்திருப்பவன், கேசின் என்ற அசுரனைக் கொன்றவன் |
| கோவிந்தன் | - ஜீவர்களை அறிபவன் |
| மதுசூதனன் | - மது என்ற அசுரனை அழித்தவன் |
| ஜநார்த்தனன் | - மக்களால் துதிக்கப்படுபவன் |
| மாதவன் | - திருமகளுக்குத் தலைவன் |
| வார்ஷ்ணேயன் | - வ்ருஷ்ணி குலத்தில் உதித்தவன் |
| அரிசூதன் | - எதிரிகளை அழிப்பவன் |
| கேசி நிஷீதனன் | - கேசின் என்ற அசுரனை அழித்தவன் |
| வாசுதேவன் | - வசுதேவன் மைந்தன், எல்லா உயிர்களிடத்திலும் இருப்பவன் |
| புருஷோத்தமன் | - பரம புருஷன் |
| பகவான் | - சற்குண சம்பன்னன் |
| யோகேச்வரன் | - யோகத்துக்கு தலைவன் |
| விஷ்ணு | - எங்கும் வியாபகமாயிருப்பவன் |
| ஜகந்நிவாசன் | - உலகுக்கு இருப்பிடம் |
| யாதவன் | - யதுகுலத்தில் தோன்றியவன் |

-திரு. எஸ். நாராயணன்-மாடக்குளம்.





# ஆனந்தக் கண்ணீர்

திரு. வி. ராகவன் - சென்னை.

சூடிக் கொடுத்த சுடர்க்கொடியாம் ஆண்டாள் "நாமமாயிரம் ஏத்த நின்ற நாராயணா! நரனே" (நாச். திரு. 1-2-1) என்று நாராயணனின் பெருமையைக் காட்டிடும் அவனது ஆயிரம் திருநாமங்களிலும் ஈடுபட்டு அருளிச்செய்திருக்கிருள். அத்திருநாமங்கள் யாவும் கேட்டவளவிலே அச்சம் தவிர்த்து உள்ளத்திற்கு அமுத தாரையாகவும், புகலிடமாகவும் திகழ்வது காரணமாய், "செவிக்கின்பமாவதும் செங்கண்மால் நாமம், புவிக்கும் புவியதுவே கண்டீர்" (நான் மு.திரு.69) எனத் திருமழிசைப் பிரானும் அருளிச்செய்தது. குணக்கேடனும் குரூபியும் தங்களைக் குணக்கேடனென்றும் குரூபியென்றும் அழைத்திடா வண்ணம் குணசீலன் என்றும், அழகன் என்றும் அழைத்திடும் வண்ணம் பெயர் சூட்டிக் கொள்கின்றனர். மூவுலகங்களுக்கும் நாதனாகிய நாராயணனோ தான் கொண்டிருக்கும் ஆயிரம் திருநாமங்களுக்கும் உரிய குணங்கள் தன்மைகள் யாவும் ஒருங்கே பொருந்தியுள்ளவன். இது காரணம் கொண்டே அவனைப் "பேராயிரமுடைய பேராளன்" என்று போற்றிப் புகழ்ந்து அருளிச் செய்திருக்கின்றனர் ஆழ்வார்கள்.

இவ்வேற்றமுடைய இவனது இவ்வாயிரம் திருநாமங்களும் "விஷ்ணு ஸஹஸ்ரநாமம்" என்று சிறப்பித்துப் பக்தி சிரத்தையுடன் பாராயணம் செய்யப் பெறுகிறது. "ஸஹஸ்ரநாமம்" என்று சொன்னாலே அது "விஷ்ணு ஸஹஸ்ரநாமம்" ஒன்றையே குறிப்பிடும் பெருமை பெற்றது. அத்வைதம், வைணம், மாத்வம் ஆகிய முச்சமயத்தலைவர்களாலும் பாஷ்யம் செய்யப் பட்ட பெருமையும் இதற்கு மட்டுமே உரியது. உள்ளத்திற்கு உவகையளிக்கும் வண்ணம் இனிய பொருள் கண்டருளியவர் வைணவ ஆசார்ய ஸார்வபௌமராகிய பராசர பட்டர் அவர்களே ஆவர். இப்பெருமைகளுக்கெல்லாம் உரிய அவன் ஆயிரம் திருநாமங்களில் "ருத்ர:" என்பதும் ஒன்றும். இதற்கு "ஆனந்தக்கண்ணீர் விட்டு அழச்செய்பவன்" என்றும் இனிமையான பொருள் கண்டுள்ளார்.

"மன: பூர்வோ வாகுத்தர:" என்றும் புராண வசநம், "மனம் எதனை முதலில் நினைக்கின்றதோ அதனை வாக்கு சொல்லுகிறது" என்பதனைக் கூறுகிறது. இதனால் நெஞ்சு அறிவு பெறும் இடம் என்பது தெளிவாகிறது. இதற்கு வசப் பட்டே காரியங்கள் புரிகின்றன. மற்ற இந்திரியங்களான கண் முதலியவைகள். மேலும் விஷ்ணு புராணமோ "மந ஏவ மனுஷ்யாணும் காரணம் பந்த மோக்ஷயோ:" என இம்மனமே மக்களின் பந்த மோக்ஷங்களுக்குக் காரணமாகின்றது எனச் சொல்லியது. ஓர் திவ்விய தேசத்து எம்பெருமானை சேவித்திட வேண்டுமென மனம் கொண்டவளவிலே அத்திவ்விய தேசம் சென்று அங்கு கோயில் கொண்டிருக்கும் எம்பெருமான் திருமேனியழகிலே கட்டுண்டு, அகங்காரமற்றவனாய் எண்சாண் கிடையாய் அவன் திருவடிகளிலே விழச்செய்கிறது மனம். இவ்வாறு செய்யவல்ல அம்மனமே சம்சாரப்படுகுழியில் வீழ்ந்துழலச் செய்யவல்லதாயும் இருக்கிறது. இவ்வாறு ஓர் நிலை கொள்ளாது மனம் சஞ்சலமடைவதால் பெரியோர்கள் இதனைக் குரங்கிற்கு ஒப்பிட்டுச் சொன்னார்கள் போலும்!

இவ்வாறு நிலையில்லா மனத்தினை "எட்டினோடிரண்டெனும் கயிற்றினால் மனந்தனைக் கட்டி" (திருச்.விரு.83) என்றவாறு எட்டும் இரண்டும் பத்தாய், பத்து என்

னும் பக்தியாகிற கயிற்றி னால் பட்டி மேய்ந்திடாவண் ணம் கட்டி, "நன் புலன் வழி திறந்து ஞானச் சுடர் கொளிஇ" என்றவாறு, நாராய ணனே பரம்பொருள், அவனொ ருவனுக்கே நாம் அடிமை. அவன் உடையவன், உடைய வனே தன்னுடைமையைக் காத் திடுவான். அவனுக்குக் கைங் கர்யம் செய்வதே புருஷார்த்தம் (அடையப்படும் பேறு) என்னும் ஞானம் உண்டாகி அதனால் சரீரம் சிதிலமாகிக் கல்நெஞ்சும் உருகி அன்பெனும் ஆராக்கா தல் அவன்பால் உண்டா கும். இவ்விதம் கனிந்த உள்ளம் கசிந்து ஆனந்தவெள்ளம் பெரு கிப் போக்குவீடாக கண்களி னின்றும் ஆறுகப் பெருக்கெடுத் தோடும். இதுதானே ஆனந் தக்கண்ணீர் என்பதாகிறது.

நித்திய சூரிகள் மட்டுமே தன்னைக் கண்டு களிக்கலாம் படியான மேன்மையினையும் வைகுந்தவானாட்டையும் விடுத் துக் கீழிறங்கி மற்றயோரும் தன்னை நெருங்கலாம்படி பள் ளிகொண்டுகிடப்பது பாற்கட லிலே. கூக்குரல் கேளாதோ உடன் சென்று ரக்ஷிக்க" என்று அங்கு கிடப்பவன். சம்சாரி சேதனன் யாரேனும் கிடைக் கப்பெறுனோ, அவன் குறை களைய எனக் கிடப்பவன் போல் அர்ச்சையில் தோன்றுகி ருன். பரந்து விரிந்த நீல நிறக் கடலின் பனை உயரம் எழும்பி வரும் வெண்ணுரை அலை கள் விருந்தாகின்றது கண் ணுக்கு. கடலினின்றும் வீசும் குளிர்ந்த காற்றே உடலுக்கு இதமாக இருக்கின்றது. பொன் னிலே பதிக்கப்பெற்ற விலை யில்லா மாணிக்கம் பிரகாசிப் பது போல் நீல நிற மணிவண் ணனான நாராயணன் "பூம்பட் டாம் புல்குமணையாம்" என் றவாறு மெத்தென்ற பஞ்ச சயனம் எனும் படுக்கையாகிற ஆதிசேடன் மீது அழுந்திக்கி டக்கும் கிடக்கையழகு உள் ளத்திற்கு உகப்பாகவும் கண் ணிற்கு விருந்தாகவும் அமை கிறது. இக்கிடக்கையழகிலே கட்டுண்டார் "கடல் நிறக்கடவு ளெந்தை அரவணைத்துயிலு மாக்கண்டு உடலெனக்கு உருகு மாலோ!" (திருமாலை 19) என நெஞ்சுருகி ஆனந்த வெள்ளப் பெருக்கிலே மூழ்கித் திளைத் திடுகின்றனர். திருப்புளியின டியே கிடக்கும் நம்மாழ்வாரும் "பாலாழிநீ கிடக்கும் பண்பை யாம் கேட்டேயும் காலா மும் நெஞ்சுழியும் கண் சுழ லும்" (பெரிய திருவந். 34) என்று அவன் கிடக்கயழகைக் கண் கொண்டு காணுவிடினும் கேட்டவளவிலே கால் நடைதா ராது முடமாய் நெஞ்சு நீர்ப் பண்டமாய்க் கரைந்து போக, கண்களோ ஒரு பொருளையும் காணவியலாது சுழலமிட அக் கிடக்கை அழகிலே கட்டுண்டு கிடக்கிருர்.

குடிமகளைக்காப்பது அரசன் கடமையானாற்போல் குற்றம் கண்டால் தண்டிப்பதும் அவ னது கடமையே. உலகைப் படைத்துக் காப்பது திருமா லேயாயினும் குற்றத்திற்குரிய தண்டனையை அனுபவித்திடச் செய்பவனும் அவனேயாவன். இவ்வாறு குற்றம் கண்டு சீறு வானேயாகில் அவனிடம் உடன் மன்றாடி வாதாடி நம் குற் றங்களை மறக்கடிக்கச்செய்ய வேண்டி, தண்டித்தல் என்ப தனையே அறியாத பெரிய பிராட்டியார் "அகலகில்லேன்' என அவனை எப்போதும் விட் டகலாது அவன் மார்பிலே வீற் றிருக்கிருள். நெருப்பெனக் கொதிக்கும் நீரிலே குளிர்நத நீரைச் சேரத்து இதமாக்கிக் கொள்ளுமாப்போல் தடுக கப்படாத சுதந்திரமிககவனான அவன சீற்றத்தையும் தணிக் கத்தான் நீராக மார்பிலே நித திய வாசம் செய்கிருள். இச சேர்த்தி அழகிலே கட்டுண்ட அடியார்கள "கிடந்தும் இருந தும் எழுந்தும் கீதம் பல பல பாடி நடந்தும் பறந்தும் குனிந் தும் நாடகம் செய்கின்றனவே" (திருவா. 5-2-4) என்றவாறு திரு வரங்கன் திருமுற்றத்திலே ஓரி டத்தில் கிடந்தும், மற்றோரி டத்தில் நின்றும், ஆனந்தக் களிப்பினால் அவரகள் நாவின் றும் பலப்பல கீதங்கள் மலர, மனத்தைக் கொள்ளைக்கொள் ளும் வண்ணம் அங்குமிங்குமாய் உலாவி நர்த்தனம் புரியும் அக் காட்சி வல்லுநர்கள் புரியும் நட னத்திற்கும் ஒப்பாயிறறு. குளி ருக்கஞ்சி மூலையிலே முடங் கிக்கிடப்பவன் சூரிய வெப்பம் மேல் விழுந்தவாறே வீறுகொண் டெழுவது போல் தாபத்தாலே அடங்கிக்கிடந்த நெஞ்சு ஆனந் தம் மேலிட்டவாறே கசிந்துருகி ஆனந்தக் கண்ணீராக அவர் கள் கண்களின்றும் பெருக்கெ டுத்தோடுகிறது.

"வண்பொன்னிப் பேராறு போல் வரும் கண்ணநீர் கொண்டு அரங்கன் கோயில் திருமுற்றம் சேறு செய் தொண் டர் சேவடிச் செழுஞ் சேறு என் சென்னிக்கணிவனே" (பெருமா திரு.1-2-3) எனப் பெருக்கெ டுத்தோடும் பொன்னிப்பேராறு போல் அத்தொண்டர்களின் ஆனந்தக் கண்ணீர் தரையில் விழ, அவர்களின் சேவடிக ளாலே துகைக்கப்பெற்றுத்திரு முற்றம் சேருகியது. திருவடிப் பொடியான அச்சேற்றினை தன் நெற்றிக்குத் திலகமாக அணிவ

தில் பேரானந்தம் அடைகிறார் குலசேகரப்பெருமான்.

"சீரார்கலையல்குல் சீரடிச் செந்துவர்வாய் வாரார் வன முலையாள்" (சிறிய திருமடல்) என்றவாறு நாராயணனைக் குழந்தையாகப் பெற்றதில் யசோதைக்குப் பெரு மகிழ்ச்சி. கண்ணனை நீராட்டி தலைவாரிக் கண்ணுக்கு அஞ்சனமிட்டு அலங்கரித்து அனுப்புவாள். அவனோ அளைந்த புழுதியெல்லாம் உடம்பிலே படிந்து கிடக்க, செய்த களவினால் வெண்ணெய் உடலெல்லாம் அப்பிக்கிடக்க, தொட்டிலில் கிடக்கும் குழந்தையைக் கிள்ளியெழுப்பி அப்பூச்சி காட்டியதால் கண்ணுக்கிட்ட மை எல்லாம் கையிலே அப்பிக் கிடக்கத் தான் அம்மாவைக் கட்டிக்கொள்வான். அவன் உடம்பிலே அப்பிக்கிடக்கும் அத்தனையும் யசோதை அணிந்திருக்கும் புடவையில் படிந்து கிடக்கும். இவ்வாறு கண்ணனின் திருமேனி சம்பந்தம் பெற்ற பொருள்கள் எல்லாம் தன் மீது படிந்து கிடக்கும் பாக்கியம் பெற்றது அவளுடைய புடவை. இதற்கெல்லாம் மூலகாரணமான கண்ணனையே தூக்கிச் சுமந்திடும் பேறு பெற்றதால் அவளது இடைக்குப் பெருமை.

"எடுத்துக்கொள்ளில் மருங்கையிறுத்திடும் ஒடுக்கிப்புல்கில் உதரத்தே பாய்ந்திடும்" (பெரியா. திரு. 1-1-9) என அவனை இடுப்பிலே ஏற்றிக்கொண்டால் தன்னிரு கால்களாலும் அவளது மருங்கை நெருக்கிடுவான். மார்போடணைத்துக் கொண்டாலோ வயிற்றிலே பாய்ந்திடுவான். சீற்றமே கொள்ளாதவளே ஆகிலும் பொறுக்கமுடியாத இவன் தீம்புகளால், "அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள் தன் அருள் நினைந்தேயழும் குழவியதுவே போன்று" (பெருமா திரு. 5-1) எனக் கடுஞ்சினம் பொங்க இடுப்பினின்றும் இவனைக் கீழே தள்ளுவாள். இவனோ அவளை விட்டகலாது அவள் கால்களை இறுக்கமாய்ப் பற்றிக்கொள்ளுவான். அவள் காலை உதற இவனோ மேலும் கெட்டியாகப்பிடித்துக் கொள்வான். உலகு அனைத்தும் தன் காலைப் பற்றும்படி செய்பவன் இன்று இவள் காலைப் பற்றுகிறான். எவ்வளவு கடுமையாக நடந்துகொண்டபோதிலும் தன்னை விட்டகலாதிருக்கிறதே என உள்ளம் கனிந்து கீழே அவனை நோக்குவாள். இதனால் அம்மாவின் கோபம் தணிந்ததெனத் தன் சின்னஞ்சிறு பவளவாயினின்றும் ஓர் மென்னகை உதிர்ப்பான். இது கண்டு யசோதை உள்ளம் குளிர்ந்து அதரங்கள் சிவக்கத் தன்னழகிய முகத்தினின்றும் ஓர் புன்னகை பூப்பாள். உவகை பொங்கக் கீழே கிடக்கும் இவனை வாரியெடுத்து மார்போடணைத்து உச்சி முகர்ந்து ஆசை தீர முத்தம் சொரிவாள். அம்மாவின் கோபம் முழுமையாக மறைந்தது. இனிப் பால் குடிக்கலாம் என மார்பகத்தைத் தடவுவான். செயற்கரிய செயல் புரியும் வீரனே! முடிந்தால் அவிழ்த்துக்கொள் என்று சவால் இடும் வண்ணம் கச்சுக் கொண்டு தன் மார்பகத்தைக கட்டிக்கொண்டிருக்கிறாள். கண்ணனின் இச்செயல்களில் மனதைப் பறிகொடுத்த திருமங்கை ஆழ்வாரின் அனுபவம்.

மெய்மறந்து உறங்குவாருக்கு சப்தம் விரோதி. பொய்யுறக்கம் கொள்ளும் கண்ணனுக்குத் தயிர் கடையும் மத்தொலி இனிமையானது. ஆம் தனக்குப் பிரியமான வெண்ணை கடைந்தெடுக்கப் படுகிறது என்பதனைத் தெரிவிப்பது இவ்வொலி தானே! கடைந்து திரண்ட வெண்ணையை ஓர் பாத்திரத்திலிட்டு இவன் கண் படாதவிடத்திலே உறியேற்றி வைத்துச் சென்றாள். "உறியார்ந்த நறுவெண்ணையொளியால் சென்றங்கு உண்டானைக்கண்டாய்ச் சியுரலோடார்க்க " (பெரிய திரு. 2-10-6) என்றவாறு வெண்ணை வைத்திருக்கும் இடமும் இருட்டு. அதனைக் காணத்துடிப்பவனும் "இருளன்ன மேனியன்" என்றவாறு கரிய திருமேனியன். இவ்விதம் இருள் மயமான விடத்திலே தன்னிரு கரங்களாலும் தடவிக்கொண்டு செல்ல அவன் கையில் வெண்ணெய்த்தாழி தட்டுப்பட, ஏற்பட்ட மகிழ்ச்சியால் வாய்விட்டுச் சிரித்தான். அப்போது வெண்மையான அவனின் பற்களினின்றும் பூரண சந்திரனின் கதிர் போன்ற ஒளி உண்டாக அவ்வொளியிலே ஓர் பழைய உரலைக்கொண்டு அவன் மீதேறி அத்தனை வெண்ணையையும் உண்டு மகிழ்ந்தான். "தாயெடுத்த சிறுகோலுக்கு உளைந்தோடித் தயிருண்ட வாய் துடைத்தமைந்தன்" (பெரியதிரு. 8.3.5) எனத் தான் வைத்த வெண்ணெய் காணாது "கண்ணா! வெண்ணெயை உண்டது நீதானே?" என்று கையிலே சிறு கோல் கொண்டு மிரட்ட அதற்கு அஞ்சுபவன் போல் சற்று ஓடி கையிலும் வாயிலும் அப்பிக்கிடக்கும் வெண்ணெயை

மறைப்பதாகக் கொண்டு உடம்பிலே தடவிக்கொள்வான். தன் களவை மறைக்கச் செய்த இச்செயலே கள்வன் இவன் தான் எனக் காட்டிக்கொடுப்பதாயிற்று. பரிவுமிக்கத் தாயின் கரம்பட்டது என்பதால் வெண்ணெயை மிகவும் விரும்புகிறான். கேட்டால் வேண்டுமளவு கொடுக்க மாட்டாளேயென்று களவு கண்டேனும் அதை உண்ணவிரும்புகிறான். அளவுக்கு மீறினால் உடம்புக்காகாதேயெனப் பதறுகிறாள் தாய். இதனால் ஏற்பட்டது சீற்றம் இவளுக்கு. இவர்கள் பாசம்தான் என்னே!

"வெண்ணெய்க் கன்றாய்ச்சி வன் தாம்புகளால் புடைக்க லந்தானை" (திருவிரு.86) என்றவாறு வெண்ணெக்களவினில் ஈடுபட்ட கண்ணனை அடிக்கடி கயிறு கொண்டு கட்டி வருத்துவாள். ஆகவே வீட்டிலுள்ள கயிறுகள் அனைத்தையும் சிறு துண்டுகளாக்கி வைத்திருப்பாள். அத்துண்டுகளையெல்லாம் ஒன்று சேர்த்து இவனைக் கட்டமுனைந்தாள் யசோதை. அக்கயிறு எட்டம்போதவில்லை. இவனைக்கட்ட, இவனை விட்டு விட்டு வேறு கயிறு தேடப் போனால் இவன் சிட்டாய்ப் பறந்து விடுவானே. இவனைக் கட்டமுடியவில்லையே. என் செய்வது? எனத் தவிக்கும் இவள் மீது இரக்கம் கொண்டு ஒரு சுற்றுக்கும் காணாத கயிறு மூன்று சுற்றுக்களுக்குப்போதுமானதாய்த் தன் உதரத்தைச் சுருக்கிக் கொண்டான். 'அம்மா! இங்கே கட்டு' எனக்காட்டியும் கொடுத்தான். தன்னை உறுத்தும்படியான பலமுடிச்சுக்களையுடைய அக்குறுங் கயிற்றால் கட்டுண்டான். தன் சங்கல்பம்



ஒன்றாலே உலகினைக் கட்ட வல்லவன் ஓர் அபலையின் கட்டில் சிக்குண்டான். தன்னைக் கட்டமுடியாது செய்ய வல்லவன் இன்று தன்னை விடுவித்துக்கொள்ள இயலாதவன்போல் கட்டுண்டு கிடக்கிறான். தன் மேன்மையெல்லாம் கிடக்க தன் எளிமைக் குணங்கள் பிரகாசிக்க, மானிட சாதியிலே பிறந்து அவர்களுடன் புரையறக் கலந்து உலகு படைக்க வேண்டித் தோன்றியவன் ஆகையால் தன் எளிமை பிரகாசிக்க கட்டுண்டு கிடக்கிறான். "அலந்தானை" என்பதனை "அலர்ந்தானை" என்று கொண்டால், தான் கட்டுண்டதால் வருந்த வேண்டியவன் முக மலர்த்தியோடு காணப்பட்டான் என்றும் இனிய பொருள் கிட்டும். இதனால் தன் அவதாரப் பிரயோசனமான ஸௌலப்ய ஸௌசீல்ய குணங்கள் (நீர்மைக்குணங்கள்) விளங்கப்பெற்றனவே என்று அவன் முக மலர்த்தி பெற்றானாம். செவிக்கின்பமளிக்கும் இவ்வித சிறப்புரை ஆசார்யப்பெருமானாகிய பட்டர் அவர்களாலேயே அருளிச்செய்யப்பட்டது.

பீறிட்டுக்கொண்டு வரும் அழுகையும் விம்மலும், உதடுகள் துடிக்கப் பயத்தால் நடுங்கிக் கொண்டு பரிதாபமாகப் பார்ப்பதும், இக்கட்டிலிருந்து தன்னை விடுவிக்குமாறு இருகரம் கூப்பிக் கும்பிடுவதும் கண்ட, "யசோதை தொல்லையின்பத்திறுதி கண்டாளே' (பெருமா. திரு.7.8) எனக் கண்ணன் கொடுத்த தொல்லைகளினிடையேயும் இவனது இச்செயல்களால் எல்லையில்லா இன்பத்தையடைந்தாள் யசோதை. தாய் தன்னைக் கட்டி வைத்து வருத்துகின்றாளே என இவன் விம்மி அழவில்லை. மாறாக பால் தயிர்

வெண்ணெய் களவு செய்து திரியும் காலம் வீணாகப் போகிறதே! கட்டுண்டு கிடக்கும் காலமளவு களவுத்தொழிலை தவிர்த்திருக்க வேண்டியிருக்கிறதே! என்று விம்மி அழுதான். கன்றுகளின் பின்னே சென்று தானாக மேயவும் தண்ணீர் குடிக்கவும் அறியாத இளங் கன்றுகளுக்குத் தானே முன்னின்று புல்மேய்வது போலவும், நீர் நிலைகளில் தானே முன்னே இறங்கி முதுகிலே கையைக் கட்டிக் கொண்டு குனிந்து தண்ணீர் உறிஞ்சிக் குடிப்பதுபோல செய்து காட்டியும் பழக்குவான். இவ்வாறு கன்று மேய்த்து இனிது உகப்பவனாகையாலே; "நான்" என்றும் அகந்தையும், "எனது" என்னும் மமகாரமும் குடிகொண்ட சேதனர்களுக்கு, தானே திருவடி பற்றியும், இருகரம் கூப்பிக் கும்பிட்டும் அவர்கள் உய்யும் வழியைக் காட்டினான் போலும்!

"தேவு மற்றறியேன் குருகூர் நம்பி" (கண்ணிநுண் சிறுத்தாம்பு) என்று குருகூர் நம்பியாம் நம்மாழ்வாரைத் தவிர வேறொருவரையும் அறியாத மதுர கவியாழ்வாரும் "கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்பண்ணிய பெருமாயன்" என்று இவனது இச் செயலில் பேரானந்தம் கொள்கிறார். நம்மாழ்வாரோ, "மத்துறு கடைவெண்ணய் களவினில் உரவிடையாப்புண்டு எத்திரம்! உரலினோடு இணைந்திருந்தேங்கிய எளிவே" (திருவா. 1-3-1) என அவன் பரத்துவத்தை நினைந்து மகிழ்ந்தவர் தெளிந்திருந்து பிறருக்கு உபதேசம் செய்தருளினார். களவு கண்டு உரலோடு கட்டுண்டு கிடக்கும் நிலையிலும் தன்னை விடுவித்துக்கொள்ள இயலாதவன் போல் கிடக்கும் அவன் எளிமையை நினைந்தார், எத்திறம்! என்று ஆறுமாத காலம் மோகித்துக்கிடந்தார்.

"பேதியாவின்ப வெள்ளத்தை" (பெரிய.திரு.4-3-2) என நிலையான ஆனந்தம் ஜீவாத்துமாக்களுக்கும் உரியதேயாயினும் ப்ரகிருதி சம்மந்தத்தால் குறைபட்டுக்கிடக்கிறது. எம்பெருமானுக்கோ ஆனந்தம் எக்காரணம் கொண்டும் எக்காலத்தும் குறைவு படாது ஒருப்பட்டிருக்கும். அவன்தானே பிறரையும் ஆனந்தமடையுமாறு செய்ய முடியும். ஆகவே அப் பரமாத்விற்கு "ருத்ர:" என்னும் திருநாமம் வெகுப்பொருத்தமே. இவ்வாறு ஆனந்தமே உருவான அவனது திருநாம சங்கீர்த்தனம் ஒன்றே சம்சாரச் சூழலிலே சிக்கித் தவிக்கும் சேதனருக்கு என்றும் நிலையான ஆனந்தத்தை அளிக்கவல்லது.



## தசாவதாரத்தின் மகிமை

நவக்கிரஹக் கோளாறுகளால் ஏற்படக்கூடிய இன்னல்களை அகற்றுதலும், நவக்கிரஹ பரீதியினால் ஏற்படக்கூடிய அனுகூலங்களை பெறுதலும் ஸ்ரீவைணவ பரமை காந்திகள் தசாவதார நாமாக்களை பக்தி சிரத்தையுடன் ஜபிப்பதனால் அடைகின்றனர். இதனால் பகவதனுக்ரஹமும் ஏற்படுவது திண்ணம். அவதாரமும் அதற்கு ஈடான நவக்கிரஹமும் கீழே காண்க.

| அவதாரம் | கிரஹம் |
|---|---|
| மத்ஸ்ய | கேது |
| கூர்ம | சனி |
| வராஹ | ராகு |
| ந்ருஸிம்ஹ | செவ்வாய் |
| வாமன | குரு |
| பார்ககவராம | சுக்கிரன் |
| ராம | சூரியன் |
| பலராம | குளிகன் |
| கிருஷ்ண | சந்திரன் |
| கல்கி | புதன் |

இதற்கு ப்ரமாண ஸ்லோகம்

ராமாவதார: ஸூர்யஸ்ய சந்த்ரஸ்ய யதுநாயக:
ந்ருஸிம்ஹோ பூமிபுத்ரஸ்ய ஸௌம்ய: ஸோமஸுதஸ்யச
வாமனோ விபுதேந்த்ரஸ்ய பார்கவோ பார்க்கவஸ்யச
கூர்மோ பாஸ்கர புத்ரஸ்ய ஸைம்ஹிகேயஸ்ய ஸூகர:
கேதோர் மீனாவதாரஸ்சன யேகே சாந்யேபி கேசரா:

T.M. விஜயலக்ஷ்மி - சென்னை.

1976 மார்ச் மாதம் மதுரையில் உலக சமய மாநாடு நடந்தது. அப்போது மதுரை மடாதிபதி அருள்திரு சோமசுந்தர ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் தமது உரையில்...

"உலகில் பெரும்பாலான நாடுகளில் பள்ளிக்கூட நிலையிலேயே சமய சம்பந்தமான விபரங்களைக் கட்டாயப் பாடமாகப் படிக்க வேண்டிய நிலை அந்நாட்டு கல்வி முறைப்படி அமைந்துள்ளது. அதனால் அங்கு கட்டுப்பாடு, ஒழுங்கு, தன்னம்பிக்கை ஆகியவை எளிதில் வளர உதவியாக உள்ளது.

அம்மாதிரி நமது நாட்டிலும் கட்டுப்பாடும், ஒழுங்கும் நன்கு

# இந்து சமயம்

**திரு. கே. ராஜபாரதி - தஞ்சாவூர்.**

வளர சிறுவயதிலிருந்தே சமய சம்பந்தமான அறிவு நூல்கள் கற்கும் நிலை ஏற்பட்டால் யாவருக்கும் நல்லதொரு பிற்காலமும், சமுதாய நலமும் நன்றாக அமையும்.

வேதம், ஸ்மிருதி, ஆகமம், உபநிடதம், திருமுறை, திவ்வியப்பிரபந்தம், தோத்திரங்கள், புராணங்கள், சாஸ்திரங்கள் என்று இந்து சமய நூல்கள் ஏராளம் உள்ளன.

இந்தியா முழுவதும் இந்து சமயத்தின் பல பிரிவுகளும் அதற்கான வழிபாட்டு ஸ்தலங்களும் நூல்களும் பரவியிருக்கின்றன.

உலகம் தோன்றிய நாள்முதல் பல சமயங்களும், சமயப் பெரியார்களும் மனித சமுதாயத்திற்கு ஆன்மீக அறிவுச் செல்வத்தை அருள் கூர்ந்து வழங்கி இருக்கிறார்கள். அப்படிப்பட்ட சமயங்களில் நமது இந்து சமயம் மிகவும் தொன்மையானது. அது எப்போது தோன்றியது என்று சொல்லமுடியாது.

மனித சமுதாயத்தில் ஒவ்வொருவருக்கும் சமய அறிவு அவசியமாகிறது. சமயத்துறையில் நமக்கு தெரிந்தவை சில, தெரியாதவை பல. 'ஔவைப் பெருந்தகையின் அருள்ஞான வாக்கு போல் கற்றது கைம் மண்ணளவு கல்லாதது உலகளவு.

கல்வி, கேள்வி, ஞானம், படித்தல், விசாரித்தல், தீர்க்கமடைதல் என்ற அடிப்படையில் சமயக் கல்வியை வளர்ப்பதற்கேற்ற சில நூல்கள் கூட தெளிவாக இல்லை.

"ஞானம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே"

இறையருளை உணர்ந்து இறைவன் திருவடிகளை வணங்குவதே கல்வியின் பயனாகும்.

'கற்றதனாலாய பயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழா அர் எனின்'

என வினவுகிறார் திருவள்ளுவர்.

ஒவ்வொரு மனிதனுக்கும் தாய்நாடு, தாய்மொழி என்று இருப்பது போல் தாய்மதம் என்றும் இருக்க வேண்டும்.

இந்து மதம் ஒருவகையில் சமய ஆராய்ச்சிக்குத் தேவையானவை அனைத்தையுமே வழங்குகிறது.

இந்து மதம் எந்நிலைக்கும் பொருந்துகிற, எல்லாவற்றையும் தன்னகத்தே கொண்ட மிகப் பரந்த ஒரு பொது மதம் எனச் சொல்லிக்கொள்ளமுடியும்.

இந்து சமயம் அகிலமனைத்தும் அளாவிய ஒரு மதம். ஏன் எனில் உலகத்திற்கும் அப்பாலுள்ள ஒருவராகக் கடவுள் இருக்கின்றார் என்பதை மட்டுமின்றி எல்லா ஜீவன்களிடத்தும் உள்ளுறை அன்பாகவும் அவர் விளங்குகின்றார் என்பதையும் அது உறுதிப்படுத்துகிறது.

சாத்துவிகமான முறையைக் கடைப்பிடிப்பவர்களும், உள்ளத்தில் தூய்மையுடன் விளங்குபவர்களுமான உத்தமர்களே கடவுளை அடைய முடியும். லட்சியம் தூய்மையே உருவாக விளங்கும் ஒன்றாதலால் வழி வகைகளும் தூயனவாகவே இருக்க வேண்டும். ஆகவேதான் இந்து சமயம், சமய வாழ்வுக்கு முக்கியமான ஆதாரமாக மனம், மொழி, செயல் அனைத்திலும் தூய்மையையே வலியுறுத்துகிறது.

ஸ்தாபனத்தின்பால் விசுவாசம், கொள்கையில் ஒருமைத்தன்மை என்பனவற்றை விட அகத்தூய்மையையே அதிக அளவிற்குக் குறிக்கோளாகக் கொண்டு திகழும் தனிப்பட்ட மதம் இந்து சமயம் ஆகும்."



# விளையாட்டு விநாயகர்

திரு. வெ. சோமசுந்தரம் - சென்னை.

"கைத்தல நிறைகனி அப்பமொ
டவல்பொரி
கப்பிய கரிமுகன்................"

என்று தின்பண்டங்களோடு காட்சி தருபவராக விநாயகரைத் தம்முடைய திருப்புகழ் பாடலொன்றில் அறிமுகப்படுத்துகின்றார் அருணகிரிநாதர். ஒருவரைப் பாராட்டிப் பேசத்தொடங்கும் போது அவருடைய மிக உயர்ந்த சிறப்பினையே முதலில் எடுத்தியம்புவது வழக்கம். அதற்கு மாறாக இங்கே பிள்ளையாருக்குப் பிடித்தமான தின்பண்டங்களின் பட்டியல் நம்முன் வைக்கப்பட்டுள்ளது. உண்மையில் இந்த பட்டியலும் கூட முழுமை பெற்றதொன்றல்ல. 'வெண்ணெய் உண்ட வாயனே மண்ணையும் (பூமியையும்) உண்டவன்' என்று கண்ணபிரானைக் குறிப்பிடுமாறு போன்ற பெருவேட்கையுடையவனான வேழமுகத்தவன் விரும்பி உண்ணும் பொருட்பட்டியல் இரண்டொரு பொருட்களோடு நின்றுவிடக்கூடியதல்ல! என்பது அருணகிரிநாதருக்கும் தெரியும். ஆனால், அவர் அகிலாண்டநாயகியின் அருமந்த தலைமகனைப் புகழ்த் தலைப்படுங்கால் அவனது அநேக அரும்பெரும் செயல்கள் இருக்க அவற்றையெல்லாம் விடுத்து அவன் விரும்பியுண்ணும் பொருட்பட்டியலை முதலாவதாகப் போட்டுக் காட்டுகின்றார். இதற்கானச சிறப்புக்காரணம் ஏதும் இருககுமோ வென்ற சிந்தனை வயப்படுவதே இக்கட்டுரையின் நோககமாகும்.

சிவசக்தியின் சீரார்த் தலைமகனே சித்திபுத்தி விநாயகன் என்பது அனைவரும் அறிந்ததே. அவன் விளையாட்டு போல பிறரால் நினைத்தும் பார்க்க முடியாத நற்செயல்கள் பலவற்றைச் செய்து முடிக்கும் ஆற்றல் வாய்ந்தவன். அவனுக்கு மேற்பட்ட பிறிதொரு தெய்வம் இல்லை என்பதாலேயே 'விநாயகன்' என்ற பெயரும் கொண்டவன். அவன் தன்னை நினைப்போரின் செயல்களுக்குத் தடையாய் உள்ளவற்றை நினைத்த நேரத்திலேயே தவிடு



பொடியாக்கி வெற்றியை அளிக்கும் வீறு கொண்டவன். அதனாலேயே 'விக்ன விநாயகன்' என்றழைக்கப்பட்டவன். அவன் இட்ட பணியை இமைப்பொழுதில் இசைவாய்ச் செய்து முடிக்க வல்ல கணங்களுக்கும் தலைவனாய் - கணபதியாய் திகழ்கின்றான். இதனால் அவனால் எண்ணிறந்த அகிலங்களிலும் தன்னருளாட்சியைத் திறம்படச் செய்ய முடிகிறது. அணுவும் அவன் ஆணைக்கடங்காது போகாது.

சாதாரணமாக, விநாயகன் எனறதும் கஜாமுகாசுரனைக் கொன்ற கஜானன கணபதியையே நாம் நம் மனக்கருத்தில் கொள்கின்றோம். விநாயக சதுர்த்தியில் பார்வதி, பரமசிவனாருக்கு அவதரித்த பெருமான் அவனேயாவான். ஆனால், விநாயக புராணத்தில் கணபதியின் பன்னிரண்டு அவதாரங்கள் பற்றிப் பேசப்பட்டுள்ளது. அதில் ஒரு அவதாரமே கஜானன கணபதி அவதாரம்.

அவனுடைய மற்ற அவதாரங்கள் பற்றியும் சுருக்கமாகக் காண
போமா? யாவருக்கும் முன்னவனாய், மூலப்பரம் பொருளாய்த் தோன்றி, மற்றையத் தெய்வங்களைப் படைத்து, அவர்களைத் தொழிற்படுத்தி, பின்னர் சித்திபுத்தியரை மணந்த பெருமானாய்த் திகழ்பவன் வக்ரதுண்ட கணபதி.

அபிஜித் - குணவதி என்ற தெய்வத் தம்பதியருக்கு, மகனாய்த் தோன்றி, தம் தந்தையாருக்கு அவர் மனம் மகிழ சிந்தாமணியைத் தந்தவன் சிந்தாமணி கணபதி. அடியார் பெறும் விக்கனங்களை அகற்றுபவனாய் - தம்மை அண

# TIRUMALA TIRUPATI DEVASTHANAMS, TIRUPATI

Visit TIRUMALA



*DURING*

## SRI VENKATESWARA SWAMY BRAHMOTSAVAM

**PROGRAMME**

| Date | Morning Festival | Evening Festival |
|---|---|---|
| 5–10–94 | — | Ankurarpanam |
| 6–10–94 | Dwajarohanam | Sesha Vahanam (Big) |
| 7–10–94 | Sesha Vahanam (Small) | Hamsa Vahanam |
| 8–10–94 | Simha Vahanam | Muthyapu Pandili Vahanam |
| 9–10–94 | Kalpavriksha Vahanam | Sarvabhoopala Vahanam |
| 10–10–94 | Mohini Avataram | **GARUDASEVA** with Lakshmi haram & Makara Kantika |
| 11–10–94 | Hanumantha Vahanam | Vasantotsavam (Evening) Gaja Vahanam (Night) |
| 12–10–94 | Sooryaprabha Vahanam | Chandraprabha Vahanam |
| 13–10–94 | **RADHOTSAVAM** | Asva (Horse) Vahanam |
| 14–10–94 | Pallaki Utsavam, Tiruchi Utsavam and Teerthavari | Avarohanotsavam |

- There will be Unjal festival in the evenings.
- Kalakshepams, music and discourses will also be held by eminent scholars and artistes.
- Festival Programmes will be announced sufficiently in advance every day.



A View of Lord Venkateswara Swamy Vari Temple, Tirumala

# A HEALING TOUCH

## T. T. DEVASTHANAMS INTRODUCES
## SRI BALAJI AROGYAVARAPRASADINI SCHEME

For ages, Tirumala, the abode of Lord Venkateswara, has been a great centre of pilgrimage Thousands of devotees visit the sacred hills every day and offer their solemn prayers to the Lord for their spiritual and physical well-being

Alleviating human suffering has been a part of dedicated efforts of TTD to the mankind. TTD already manages a Leprosorium, centre for physically handicapped, a poor home and also a central hospital To provide the most advanced medical technology to the needy, the TTD has launched another monument, a blessing from the Lord by opening Sri Venkateswara Institute of Medical Sciences – a sophisticated super speciality centre on the lines of AIIMS of New Delhi & JIMPER of Pondicherry and PGI of Chandigarh Total well being of man is the aim of Sri Venkateswara Institute of Medical Sciences, which apart from offering service, training and education in medical sciences, also encourages Research and development

The doors to such a state of the art technology should be open to our poor and disabled brethren

With a view to achieving this, Sri Venkateswara Institute of Medical Sciences has introduced a New scheme Balaji Arogyavaraprasadini Scheme To accomplish the goal of proving the sophisticated medical technology to every individual at an affordable rate, we invite the generous co-operation of philanthropists and the general public.

### The Scheme in essence:

A donor can make an endowment of Rs. 1000/- or multiples thereof / Rs. 1 lakh / Rs. 5 lakhs / Rs. 10 lakhs to T.T Devasthanams which will in turn contribute matching grant. The entire amount will be deposited in fixed deposit in a nationalised Bank and the interest accrued on it will be utilised for providing free medical services to the poor and the needy.

A Chair in Sri Venkateswara Institute of Medical Sciences will be named after the donor who contributes Rs. 10 lakhs or above. These endowment chairs are purely research oriented.

- Donations can be made by any individual / family / company / firms etc.
- The name of the donor who endows Rs. 5 lakhs or more will be displayed prominently in the Reception hall of the hospital.
- The discharge ticket of the benefited patient will carry the name of the donor.

### Additional Benefit and facilities :

- Donations to Sri balaji Arogyavaraprasadini Scheme are exempted from Income Tax under 80 (G)
- Paid rooms / Air conditioned rooms will be allotted to family members of the donor in the hospital.
- Paid rooms can be named after donors who contribute a sum of Rs 5 lakhs or above
- By paying Rs. 5 lakhs and above, a donor may sponsor one operation per year
- Donors can sponsor feeding of the In-patients and out-patients They may also sponsor a travel fellowship for the faculty per year.

All donations, by D.Ds. drawn in favour of The Executive Officer, T T Devasthanams, Tirupati-517 501 (Andhra Pradesh) should reach the Director, Sri Venkateswara Institute of Medical Sciences, Tirupati along with the following particulars

- Name and address along with the latest passport-size photographs of the family members of the donor who contributes Rs. 1 lakh or more.
- Name and address of the person to whom Income Tax Exemption Certificate is to be issued.

The donors are also welcome to offer equipment, vehicles etc. to SVIMS or even sponsor health camps in rural areas, if they so desire. Further details can be had from

**The Executive Officer**
**T.T. Devasthanams, Tirupati**
**or**
**The Director**
**Sri Venkateswara Institute of Medical Sciences, Tirupati**

**EXECUTIVE OFFICER**

டியவர் எவராயினும் அவர் தம் தொல்லைகளைப் போக்கி நலம் சேர்ப்பவனாய் - வரேண் வயன், புஷ்பவத் என்பவர்க ளின் அருந்தவப் புதல்வனாய் அவதரித்து தந்தைக்கு நல்லருள் மொழி உபதேசித்தவன் விக்ன விநாயகன். அவன் மொழிந் ததே கணபதி கீதை எனப்ப டும். சூரனை வென்று அவனை மயில் வடிவான தம் வாகனமா கக் கொண்ட முருகப்பெருமா னைப் போலவே மயில் ரூபத் தில் இருந்த ஸிந்து என்ற அசுரனை வென்று அவ னைத் தாமேறும் வாகனமாக்கிக் கொண்டவன் மயூரேச கணபதி. அவன் சங்கடஹர சதுர்த்தி விரதம் பூண்ட பார்வதி தேவி யாரிடம். தோன்றியவன். அந லன் என்ற அசுரனின் கொடு மைகளுக்கு ஆளாகி அவனைக் கொன்றொழிக்குமாறு வேண்டிய தேவர்களுக்காக இரங்கி அவ்வ சுரனை விழுங்கி அருட்புரிந்த தோடன்றி வெம்மைமிக்க அந லாசுரனை விழுங்கிய வெப்பு நீங்குவதற்காகத் தம் நெற்றி யில குளிர்ச்சிமிக்க சந்திரனைச் சூடிக் கொண்டவன் பாலச்சந் திரன்.

புகை வடிவோடு உலவி பலருக்கும் பெருந்தீங்கி ழைத்து வந்த அசுரனொருவ னைக் கொல்வதற்காக மாத வன், ஸுமுதா என்ற அரச தம் பதிகளிடம் தோன்றியவன் தூம கேது.

பலி என்ற அரக்கனை ஒழிப் பதற்காக அவதரித்தவன் கஜே சன். பரமனும், பார்வதியும் யானையின் சித்திர வடிவம் கண்டு இன்புற்ற காலையில் தோன்றியவன் கணபதி.

காசியபர் வேண்டுகோளுக்கி ணங்க அதிதியிடம் தோன்றி தேவர்களுக்கும், மனிதர்களுக் கும் கொடுமைகள் பல இழைத்து வந்த அசுரர்களை அழித்தொழித்தவன் மகோதக டன், சிவபெருமானின் முகத தினின்றும் உமாதேவியரால் ஐந்து முகங்களோடு தோற் றுவிக்கப்பெற்று துராஸதன என்ற அரக்கனைக் கொன்ற வன் துண்டி கணபதி. மரீசி முனிவரின் பெண்மகவான வல் லபையை மணந்தவன் வல்லப கணபதி. இவனே மஹாகண பதி எனவும் அழைக்கப்படுகின் றான்.

விநாயகனின் அவதாரங்கள் விநாயக புராணம் கூறுகின்ற பன்னிரண்டு மட்டுமே என்று நினைத்தல்கூடாது. அவன் எங்குமாய், எவையுமாய், எப் போதுமே இருப்பவன். அவன் தோற்றத்திற்கும், தொழிலுக்கும் முடிவு கட்டி உரைக்க யாரால் முடியும்? ஆனால் நம் முன் னோர்களின் அரிய தவப்பய னாய் எழுந்த புராண வரலாறு களின் பின்னணியில் பேருண் மைகள் பல ஒளி விடுவதை நாம் மறந்துவிடலாகாது. நாம் இது காறும் கண்ட விநாயகப்பெரு மானின் அவதாரங்களை எடுத் துக்கொண்டால்கூட ஒவ்வொன் றுக்கும் ஒரு பெரிய நோக் கம் இருப்பதை நாம் காண் கிறோம். அவன் சித்தி புத் தியரையோ, வல்லபையையோ மணந்தானென்றால் அதனால் அகில முழுவதற்கும் மகிழ்ச்சி அளித்தான் என்பதே பொருளா கும். வடிவாலும், ஆற்றலாலும் வேறுபட்ட அசுரரை அவன் அழித்ததின் மூலம் தீமையின் வேரறுத்தவனாகிறான். நன் மையாக்கமும், தீமை ஒழிப் பும் ஒருங்கே நிகழ்ந்தால் இப் புவியிலேயே சுவர்க்க வாழ்வு மலர்ந்து விடும் அல்லவா? அத னைச் செய்ய வல்லவனே விநா யகன்.

அவன் யானை முகத்தவன், ஐந்து கரத்தவன்; தொந்தி வயிற்றவன், தேவரக்காவலன். அவன் உருவிலேயே மிருக வர்க்கமும், மனித கூட்டமும், தேவர்கணமும் ஒன்றுபடுத்தப் பட்டு மிளிர்வதைக் காணலாம். 'எல்லா உயிரும் ஏக இறைவன் முன்னிலையில் ஒன்றே' என்ற உண்மையும் வெளிப்படுத்தப்படு வதை உணரலாம்.

அவன் உருவம் பெரிது. அவ னைத் தாங்கும் மூஞ்சூறுவோ மிகச் சிறியது. பெரியதில் பெரி யதைச் சிறியதில் சிறியதும் தாங்குமாறுச் செய்யும் வல்ல பம் அவ்விறைவனுக்கே உண்டு. அவன் நினைத்தால் விண்ணை யும் வில்லாக வளைக்க முடி யும். மணலைக்கூட கயிறாகக் திரிக்க முடியும். அவன் ஆற்ற லுக்கோர் அளவுகோல் ஏது?

எல்லையில்லா ஆற்றல் உடையவனானாலும் விநாய



கப் பெருமான் கருணையே வடிவமானவன். தம்முடைய இரண்டு தந்தங்களில் ஒன்றை ஒடித்து அதனை எழுதுகோலாகக் கொண்டு மகாபர்வதத்தில் மகாபாரதத்தினை வியாசபகவான் சொல்லச்சொல்ல எழுதியன். இதனை அருணகிரிநாதர்,

"முத்தமிழ் அடைவினை முற்படு
கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே"

என்று கூறியுள்ளார். வியாசர் வடமொழியில் கூற விநாயகப் பெருமான் அதனைத் தமிழில் மொழிபெயர்த்து எழுதினார் போலிருக்கிறது. அருணகிரிநாதர் 'முத்தமிழ் அடைவு' என்று மகாபாரதத்தினைக் குறிப்பிடுவதைப் பார்த்தால் நமக்கு அவ்வாறே நினைக்கத்தோன்றுகின்றது.

வல்லபையையும், சித்தி புத்தியரையும் மணந்த விநாயகப்பெருமான் தன்னளவில் மகிழ்ச்சி கொண்டு மனநிறைவு கொண்டு விடுவான் என்று நினைத்தால் அது தவறாகும். தன் தம்பியான முருகப்பெருமான் கானகத்தே வள்ளி தேவியாரைக் கூடும் வகையறியாது தவித்த காலத்தில் யானை உருவிற் சென்று இருவரும் மணம் செய்து கொள்ளும் வகையில் உதவி புரிந்த உத்தமன் விநாயகன். அவன் இவ்வையகத்தில் மணவினைக்கு ஏங்கும் மாந்தர்தம் மனக்குறையையும் தீர்த்து வைப்பான் என்பதில் ஐயமில்லை.

"அத்துய ரதுகொடு சுப்பிரமணிபடும்
அப்புன மதனிடை இபமாகி
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே!

என்பன அருணகிரியாரின் திருப்புகழ் பாடலடிகள்! தம்பிக்காக யானை வடிவில் போந்தவன் நமக்காக நாம் வேண்டும் வடிவில் வரத் தயங்க மாட்டான்.

நாம் இதுகாறும் கண்ட விநாயகப்பெருமானின் திருவவதாரங்கள், திருச்செயல்கள் அனைத்தும் அவனைப் பொறுத்த அளவில் ஒரு 'பிள்ளை விளையாட்டே!'. நம்மைப்போல ஒரு செயலைச் செய்து முடிக்க முதலில் எண்ணம் கொண்டு, பிறகு அதற்கான முயற்சிகளை மேற்கொண்டு, பலகாலும் தோல்விகளைச் சந்தித்து, இறுதியில் 'ஒருவாறுக எண்ணியதை முடித்தோம்' என்ற மனத்திருப்தி அடைகின்ற நிலை விநாயகனுக்கு இல்லை. அவன் நினைத்த மாத்திரத்தில் முக்காலத்தையும் ஒரு நொடியில் சுருக்கிவிட வல்லவன். மூவுலகிலும் நிறைந்திருந்து முன்னியதை முடிக்கக்கூடியவன். நம் மறிவிற்கு எட்டக்கூடிய எப்பெரிய செயலையும்விட மிக மிகப் பெரிய பல்லாயிரம் செயல்களையும் ஒரே நேரத்தில் செய்து முடிக்கும் ஆற்றல் வாய்ந்தவன். அவனால் ஆகாதது யாதொன்றுமில்லை. ஆகின்றவற்றுக்கும் முயற்சியென ஏதும் தேவையுமில்லை.



இத்தகைய பேராற்றல் மிக்க பெருமான் முன்னிலையில் நாம் அவனுடைய எத்தகைய பெரிய செயலைச் சொல்லித் துதித்தாலும், மலையைத்தூக்க வல்லவனைக் 'கடுகைத் தூக்கிய பெரியவனே!' என்று போற்றுவதாகவே ஆகும். இதனை நன்குணர்ந்திருந்ததாலேயே அருணகிரிநாதர், அவனுக்கும் நமக்கும் ஒருசேர மகிழ்ச்சி தரவல்ல தின்பண்டங்களின் நினைவு வரப் பெற்றவராய் அவற்றுக்கே தம் திருப்புகழ் பாடலில் முதலிடம் தந்துள்ளார்.

விநாயகன் எப்போதும் நிறைந்த வயிற்றனாய் இருப்பவன். தன்னைப் போலவே பிறரும் திருப்தியுடன் உண்டு வாழ வேண்டுமென்ற கருணையுள்ளம் கொண்டவன். எனவே அவனை வழிபடும் அடியவர்கள் நிறைந்த மனத்தினராய், 'உண்டிப்பிரியனே' என்றழைத்தால் மிகவும் உவப்புடன் கேட்டு மகிழ்வான். கேட்ட வரமளிக்கவும் செய்வான். இந்நுட்பத்தினை உளம் கொண்டே அருணகிரிநாதர் முதலில் அவனுடைய திருக்கரத்தில் இலங்கும் மாங்கனியையும், அவனுக்குப் பிரியமான அப்பம், அவல், பொரி முதலானவற்றையும் கூறியபிறகு அவனுடைய அருட்செயல்களில் ஒன்றிரண்டைச் சுட்டிச் செல்லமுனைகிறார்.

ஔவையார் கூட,

"பாலுந் தெளிதேனும் பாகும்
பருப்புமிவை
நாலும் கலந்துனக்கு நான்
தருவேன்-கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே!
நீ எனக்கு
சங்கத் தமிழ் மூன்றுந் தா!"

என்று கேட்பதைக் காண்கிறோம். பிள்ளையாருக்குப் பிடித்தமான பால், தெளிதேன், பாகு, பருப்பு என்ற நான்கையும் தருவதின் மூலம் அவரிடமிருந்து இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழையும் பெற்றுவிட நினைக்கிறார் ஔவையார்.

நாமும்கூட அவனுக்குப் பிடித்தமான எளிய பொருளை அவனுக்குக் காணிக்கையாக்கி அரிதினும் அரிய அவன் அருளைப் பெறலாமே!

மற்ற எந்த தெய்வ வழிபாட்டிலும் எளியமுறையுடையது விநாயகர் வழிபாடு. மஞ்சளையும், சாணத்தையும் கூட தனித்தனியே பிடித்து வைத்தால், அங்கேயும் வர மருள வந்துவிடுவான் விநாயகன். 'எடுப்பார் கைப்பிள்ளையாக' இருப்பவன் உண்மையில் நம் விநாயாகனே ஆவான். அவனுக்கு அருகம்புல்லும், எருக்கம்பூ மாலையுமே போதுமான பூசனைப்பொருட்களாகும். எதுவும் முடியாவிட்டால் நம் இதய மலரையாவது அவனுடைய பொன்னார் திருவடிகளில் காணிக்கையாகச் சமர்ப்பிக்கலாம். நம் முன்னோர்கள் இதயத்தால் செய்யப்படும் எந்த பூசனையையும் மிகவும் உயர்வாகவே கருதி வந்துள்ளனர்.

பிள்ளையாரின் எளிவந்த தன்மையைக் கருதி அலட்சியம் செய்தல் ஆகாது. அவ்விதம் செய்தால் விளையாட்டுப்



பிள்ளையார் விபரீதம் விளைவிக்கும் பொல்லாப் பிள்ளையாராகிப் போவான். 'தன்னுடைய தந்தையாயிற்றே' என்று சிறிதும் இரங்காது முறைப்படி தன்னை முதலில் வணங்காது திரிபுரத்தை எரிக்கப் புறப்பட்ட சிவபெருமான் ஏறிய இரதத்தின் அச்சை முறித்தவன் அல்லவா விக்கின விநாயகன்!

இதனை அருணகிரிநாதர்,

"முப்புரம் எரிசெய்த அச்சிவன்
உறை ரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா"

என்று போற்றியுரைத்துள்ளார்.

அடியாருக்கு வரும் விக்கினங்களை (காரியத் தடைகளை) அகற்றுபவன் மட்டுமல்ல. தன்னைத் தொழாதவருக்கு விக்கினங்களை உண்டாக்கி அல்லற்படுத்துபவனும் விநாயகனே யாவன். அவன் ஏற்படுத்தும் விக்கினங்கள் உயிர்க் கூட்டத்திற்கு இறையுணர்வினை யூட்டி நல்வழிப்படுத்தவல்லவை. எனவே நாமனைவரும் வல்லபை மணாளனை வணங்கி வழிபாடியற்றி நன்னிலை அடைவோமாக.

இறுதியாக இக்கட்டுரையில் ஆங்காங்கு எடுத்துக்காட்டப் பெற்ற திருப்புகழ் பாடலடிகள் அடங்கிய பாடலின் முழுவடிவைக்கண்டு கற்று மகிழ்வோம்.

"கைத்தல நிறைகனி அப்பமொ
டவல்பொரி
கப்பிய கரிமுகன் அடிபேணிக்
கற்றிடும் அடியவர் புத்தியில்
உறைபவர்
கற்பகம் எனவினை கடிதேகும்
மத்தமு மதியமும் வைத்திடும்
அரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி
புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே
முத்தமிழ் அடைவினை முற்படு
கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே
முப்புரம் எரிசெய்த அச்சிவன்
உறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா
அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை இபமாகி
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே!
-திருப்புகழ்



(தொடர் கட்டுரை)

# முமுட்சுப்படி

திரு. மாருதிதாஸன் - காஞ்சிபுரம்.

மூலம் : 122

"இதில் முற்கூற்றால்,பெரிய பிராட்டியாரை முன்னிட்டு ஈச்வரன் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது; பிற்கூற்றால், அச்சேர்த்தியிலே அடிமை இரக்கிறது."

1) துவயத்தில் காணப்படும் இரண்டு வாக்கியங்களின் பொருளைச் சுருக்கமாகக் கூறுக.

"ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே" என்பது துவயத்தின் முற்கூற்று.

"பெரிய பிராட்டியாரை முன்னிட்டு,
பெருமானுடைய இரண்டு திருவடிகளையும் உபாயமாகப் பற்றுகிறேன்" என்பது முற்கூற்றின் தெளிந்த பொருளாம்.

"ஸ்ரீமதே நாராயணாய நம:" என்பது துவயத்தின் பிற்கூற்று. "பெரிய பிராட்டியாரும் பெருமானுமாகிற சேர்க்கையில் என்றும் கைங்கர்யத்தைப் புரிவேனாக!" என்பது பிற்கூற்றின் தெளிந்த பொருளாம்.

மூலம் : 123

"(ஸ்ரீ) என்று - பெரிய பிராட்டியார்க்குத் திருநாமம்".

1) 'ஸ்ரீமத்' என்னும் பதத்திலுள்ள 'ஸ்ரீ' என்பதன் விளக்கம் யாது?

'ஸ்ரீ' என்பது பெரிய பிராட்டியாரைக் குறிக்கும் திருநாமம்.

'ஸ்ரீ' என்பதற்குச் செல்வம், அழகு, இளமை, மேன்மை எனப் பொருள்கள் பல உள்ளன. இங்கு 'ஸ்ரீ' என்பதற்குப் பொருள் பெரிய பிராட்டியார் என்பதேயாகும்.

பெரிய பிராட்டியாருக்கு இலக்குமி, பத்மா, கமலா, அரிப்ரியா என்பன போன்ற திருநாமங்கள் பல உள்ளன போன்றே 'ஸ்ரீ' என்னும் திருநாமமும் உண்டு.

ஆனால் 'ஸ்ரீ' என்பது மற்றைய திருநாமங்களைப் போன்றதன்று. மிகவும் சிறந்த திருநாமம். பெருமானுக்கு 'அ' என்னும் ஒலி சிறந்த திருநாமமாகக் கொள்ளப்படும். அதுபோலவே, பெரிய பிராட்டியாருக்கும், 'ஸ்ரீ' என்னும் திருநாமம் சிறப்புடைய ஒன்று.

'அ' என்பது பெருமானின் காக்கும் தன்மைக்கு இன்றியமையாத இயல்புகளைத் தெரிவிக்கின்றது. அவ்வாறே 'ஸ்ரீ' என்பதும் பிராட்டியாரின் புருஷகாரத்திற்கு இன்றியமையாத இயல்புகளைத் தெரிவிக்கின்றது.



மூலம் : 124

"ஸ்ரீயதே ச்ரயதே".

1) இம்மூலத்தை விளக்குக.

'ஸ்ரீ' என்பதன் வினையடி 'ச்ரீஞ்' என்பது. இதற்குச் சேவித்தல் என்பது பொருள்.

ஸ்ரீ என்பது வடமொழி இலக் கணத்தின்படிக் கர்மணி வியுற் பத்தி சொல்லும்போது, விகு தியோடும் சேர்ந்த வினையடி 'ச்ரீயதே' என்றாகும்.

கர்த்தரி வியுற்பத்தி சொல் லும் போது விகுதியோடும் சேர்ந்த வினையடி 'ச்ரயதே' என் றாகும்.

மூலம் : 125

"இதுக்கு அர்த்தம், எல்லார்ச் கும் இவனைப் பற்றி ஸ்வரூ பலாபமாய், இவள் தனக்கும் அவனைப் பற்றி ஸ்வரூப லாப மாய் இருக்கும் என்று."

1) 'ச்ரீயதே' 'ச்ரயதே' என்பவற்றின் பொருளை விளக்குக.

'பிராட்டியார் எல்லாச் சேத னர்களாலும் சேவிக்கப்படுகி றார்.' என்பது ச்ரீயதே என் பதன் பொருளாகும். சேஷத்து வத்தையே வடிவமாய்க் கொண் டுள்ள சேதனரின் ஆன்ம சொரூபத்துக்கு இதன் மூலம் பயன் கிடைக்கிறது.

'பிராட்டியார் பெருமானைச் சேவிக்கிறார்' என்பது ச்ரயதே என்பதன் பொருளாகும். பெரு மானைப் பிராட்டியார் வணங் குவதால், தாம் பெருமானுக்கு அடியவளாய் இருக்கும் சொரூ பத்துக்குப் பயன் உண்டாகி றது.

சேதனன் பிராட்டியாரைச் சேவிப்பதால் பிராட்டியாருக்குத் தலைமைத் தன்மை உளதாகி றது.

பிராட்டியார் பெருமானைச் சேவிப்பதால், அடியவளாம் தன்மை உளதாகிறது.

இவ்வாறு பிராட்டியாருக்குச் சேஷித்துவ நிலை, சேஷத்துவ நிலை என்னும் இரு நிலைகள் உளதாதலைக் காணலாம்.

மூலம் : 126

"இப்போது இவளைச் சொல் லுகிறது புருஷகாரமாக".

1) பிராட்டியாரிடம் உள்ளது புருஷ-காரத்துவமா? பிராப்பியத்துவமா?

பகவானை உபாயப் பொரு ளாகப் பற்றுகிற சமயத்தில், பிராட்டியார் புருஷகாரமாகவே இருக்கிறார். எனவே, பிராட்டி யாரிடம் உள்ளது புருஷகாரத் துவமே என்கிறார் ஆசிரியர்.

2) பகவான் எங்ஙனம் உபாயப் பொரு-ளாக உள்ளாரோ, அவ்வாறே பிராட்டியும் உபாயப் பொருளாக உள்ளார் என்று சிலர் கூறுகின்ற-னரே?

"இப்போது இவளைச் சொல் லுகிறது புருஷகாரமாக" என்று ஆசிரியர் குறிப்பதால், பிராட் டியாருக்குப் புருஷகாரத் தன் மையே உள்ளது. உபா யத் தன்மை இல்லை என்பது தெளிவாகிறது.

3) பிராட்டியாருக்கு உபாயத்தன்மை-யும் உண்டு என்று சிலர் கூறுவ-தைப் பிள்ளையுலகாசிரியர் மறுத்-துக் கூறுவானேன்?

"புருஷகாரத் தன்மை பெரிய பிராட்டியாருக்கே உரித்தானது; உபாயத்தன்மை தனக்கே உடைமைப் பொரு ளாய் உள்ளது" என்று பகவான் தான் அருளிச் செய்த பாஞ் சராத்திரத்தில் வெளிப்படையா கவே அருளிச்செய்துள்ளார்.

"லக்ஷ்மீ: புருஷ காரத்வே.
நிர்திஷ்டா பரமர்ஷிபி:
அஹம் மதப்ராப்த்யுபாயோவை
ஸாக்ஷாத் லக்ஷ்மீபதி: ஸ்வயம"

என்பது சுலோகம்.

எனவே, பணபாயுள்ள பெரிய பிராட்டியார் புருஷகாரமாகவே இருப்பவர் என்பதே பொருந்தும்.

பிராட்டியாருக்கும் உபாயத் தன்மை உள்ளது என்று கூறினால், "உபாயத்தன்மை எனக்கே உடைமைப் பொருளாய் உள்ளது" என்று பாஞ்சராத திரத்தில் பகவான்கூறியுள்ள கூற்றுக்கு மாறுபடும் என்பது வெளிப்படை.

எனவே, பிராட்டியாருக்கு உபாயத்தன்மையும் உண்டு என்று சிலர் கூறுவதைப் பிள்ளையுலகாசிரியர் மறுத்துக் கூறுகிறார்.

மூலம் : 127

"நீரிலே நெருப்புக் கிளருமாப் போலே, குளிர்ந்த திருவுள்ளத் திலே அபராதத்தால் சீற் றம் பிறந்தால் பொறுப்பதிவ ளுக்காக."

1) தனக்குத் தலைவனாக உள்ள பெருமானைச் சென்றடைவதற்கு உரிமை பெற்றிருக்கும் சேத-னன் பிராட்டியாரைப் புருஷகா-ரமாகப் பற்ற வேண்டுவது ஏன்?

பகவான் கருணையே வடி வமானவன். எனினும் தன் அடியவன் செய்யும் அளவற்ற குற்றங்களைக் காணும்போது, குளிர்ந்த நீருக்குள்ளும் நெருப்பு

பிறத்தல் போன்று பெருமானுக்குச் சீற்றம் உண்டாகிறது.

அப்போது தனக்குண்டாகும் கோபத்தைத் தணித்துக்கொண்டு தன் அடியவரின் குற்றங்களைப் பிராட்டியாருக்காகவே பொறுத்துக்கொள்கிறுன்.

எனவேதான், பிராட்டியாரைப் புருஷகாரமாகப் பற்ற வேண்டியுள்ளது. "பிடித்தொரு தந்தை அடித்தால் தாய் உடன் அணைப்பன்" என்பது அமுத வாக்கல்லவா?

2) அடியவருடைய குற்றங்களைப் பிராட்டியாருக்காகப் பகவான் ஏன் பொறுத்துக்கொள்கிறுர்?

பகவானின் கருணை உள்ளத்தைப்புகழ்ந்து பற்பல இனிய சொற்களைக் கூறி, பகவானின் சீற்றத்தை மாற்றும் வல்லமை பிராட்டியாருக்கு மட்டுமே உண்டு. பிராட்டியின் இன்சொல்லுக்கும் பகவானின் நெஞ்சம் இளகவில்லையானால், பிராட்டியார் தன் அழகைக் காட்டிப் பெருமானைத் தம் வசப்படுத்தி அடியவனின் குற்றங்களைப் பொறுக்குமாறு செய்து விடுவார்.

இக்காரணங்களால்தான் பகவான் தன் அடியவனுடைய குற்றங்களைப் பிராட்டியாருக்காகப் பொறுத்துக் கொள்கிறுர்.

## மூலம் : 128

"இவள் தாயாய், இவர்கள் க்லேசம் பொறுக்கமாட்டாதே அவனுக்குப் பத்நியாய், இனிய விஷயமாயிருக்கையாலே கண்ணழிவற்ற புருஷகாரம்."

1) பெருமானையும், அடியவனையும் சேர்த்து வைப்பதற்குப் பிராட்டியாரே தகுதி வாய்ந்தவர் என்பதனை விளக்குக.

பிராட்டியார் உலக உயிர்களுக்குத் தாயாக விளங்குகிறுர். எனவே, உயிர்கள் படும் துன்பத்தைக கண்டு மனம் பொறுக்க மாட்டாமல், உயிர்கள்பால் இரக்கம் கொள்கிறுர்.

பகவானுக்கு பத்தினியாகவும், பகவானுக்கு இன்பம் தருபவராகவும் இருப்பதனால் பிராட்டியாரே உயிர்களுக்குக் கருணை ததும்பும் புருஷகாரமாக இருப்பதற்குத் தகுதி வாய்ந்தவராகிறுர்.

எனவே பெருமானையும், உயிர்களையும் சேர்த்து வைப்பதற்குத் தகுதி வாய்ந்தவர் பிராட்டியாரே என்பதனை நன்கு தெளியலாம்.

## மூலம் : 129

"திருவடியைப் பொறுப்பிக்குமிவள் தன் சொல்வழி வருமவனைப் பொறுப்பிக்கச் சொல்ல வேண்டாவிறே"

1) சுதந்தர புருஷனான பகவான் பிராட்டியின் சொல்லுக்குக் கட்டுப்படுதல் கூடுமா?

ஆற்றலும் ஆரவாரமும் மிக்கவன் ஆஞ்சநேயர். அவரையே தம் அருளுரையால் வசப்படுத்தி அமைதிப்படுத்தியவர் பிராட்டியார்.

பெருமானோ பிராட்டியின் அழகில் சிக்குண்டு பிராட்டியிடம் அளவற்ற அன்பு காட்டுபவர். மேலும் தம் சொல்லுக்குக் கட்டுப்பட்டு நடப்பவர். அப்படிப்பட்ட பெருமான் பிராட்டியார் சொல்லிவிட்டார் என்பதற்காகக் கட்டுப்பட்டு அடியவர் செய்யும் குற்றங்களைப் பொறுத்துக்கொள்வார் என்பதில் ஐயமே இல்லை.

2) அனுமனைப் பிராட்டியார் தம் அருளுரையால் அமைதிப்படுத்தினார் என்பது எப்படி?

பிராட்டியார் இராவணனால் இலங்கையில் சிறைவைக்கப்பட்டார். இராவணனின் ஏவலர்களான அரக்கியர் பலவாறு பிராட்டியாரை அச்சுறுத்தித் துன்புறுத்தினர். பழிசொற்கள் பலவும் கூறிப் பிராட்டியின் மனதைப் புண்படுத்தினர்.

அப்போது அனுமன் அங்குச் சென்றுர். பெருமானின் வெற்றியைப் பிராட்டிக்கு எடுத்துக்கூறினார். மங்கலச்செய்தியைக் கேட்ட பிராட்டியார் மனம் மகிழ்ந்தார். ஏதாவது வரம் கேட்டுப் பெற்றுக்கொள்ளுமாறு அனுமனை வேண்டினார்.

அனுமரோ வரம் ஏதும் தனக்கு வேண்டாமென்று கூறி விட்டார்.

ஆயினும், பிராட்டியார்க்கு இதுவரை துன்பம் செய்து வந்த அரக்கியரை வஞ்சம் தீர்த்துக்கொள்ளப் பிராட்டியாரிடம் ஆஞ்சநேயர் அனுமதி வேண்டினார்.

அருளே வடிவாகவும், உலக மாதாவாகவும் உள்ள பிராட்டி இதற்குச் சம்மதிப்பாரா?

"உத்தமனே! மன்னவன் கட்டளைப்படித்தானே இவர்கள் தம் கடமைகளைச் செய்தனர். உன் பார்வைக்கு இவர்கள் குற்றவாளிகளாகத் தெரியலாம். ஆனால், என் கண்களுக்கு இவர்கள் குற்றம் செய்தவர்களாகப் புலப்படவில்லை. மேலும், உலகில் குற்றம் செய்யாதவர்கள் யார்? அனைவரும் ஏதோ ஒரு வகையில் குற்றம் செய்பவர்களே! எனவே, அனைவரும் தண்டனைக்குரியவர்கள்.

"நகஸ்யதி ந அபராத்யதி"

மேலும், மங்கலச் செய்தியைச் சொல்லி வருமாறு தானே பெருமான் பணித்துள்ளார். இவர்களை இம்சித்து வருமாறு பணிக்கவில்லையே! இத்தனைக்காலம் நான் அனுபவித்து வந்த துன்பங்களுக்குக் காரணம் என் தீவினையே! வேறு யாரும் இதற்குக் காரணரல்லர்! எனவே, தூயவனே! 'இவர்களுக்கு யாதொரு தீங்கும் நான் செய்யமாட்டேன்!' என்னும் வரத்தை எனக்கு அருள்வாயாக!" என்று பிராட்டியார் கேட்டுக்கொண்டார்.

பிராட்டியாரின் இந்த அருளுரை கேட்டு ஆஞ்சநேயர் அமைதியானார். (திருவடி- ஆஞ்சநேயர்)

## மூலம் : 130

"மதுப்பாலே இருவர் சேரத்தியும் நித்யமென்கிறது."

1) ஸ்ரீமத் என்னும் பதத்தில் உள்ள (ஸ்ரீ=மத்) மத் என்பதன் பொருள் யாது?

ஸ்ரீ, மத் என்னும் இரண்டு சொற்களுள் 'ஸ்ரீ' என்னும் சொல்லுக்கு இதுவரை ஆசிரியர் பொருள் கூறி வநதார். இனி, 'மத' என்பதற்குப பொருள் கூறுகிறுர்.

மத் (மதுப்பு) என்பதற்குப பொருள்கள் பல உள்ளன. எனினும், இங்கு இச்சொல்லுக்கு நித்திய யோகம் என்பதே பொருளாகும். நித்திய யோகம் என்பதற்கு என்றும் உள்ள தொடர்பு எனப் பொருள கொளளலாம.

பிராட்டியாருக்கும் பெருமானுக்கும் தொடர்பு எனறும் உளளது என்பதனையே மதுப்பு என்னும் சொல் உணரத்துகிறது.

## மூலம் : 131

"இவளோடே கூடியே வஸ்து வினுடைய உணமை."

1) பெருமானுடைய உண்மை (உளதாம் தன்மை) எங்ஙனம் உள்ளது?

பெரிய பிராட்டியாரோடு சேர்ந்தே பெருமானுடைய உண்மை உளளது. மணத்தோடு சேரநதே மலர் உள்ளது என்பது போல, பெரிய பிராட்டியாரோடு சேர்ந்தே உள்ளது பெருமானாகிற தத்துவம் என்பது உண்மை.

## மூலம் : 132

"ஈச்வர ஸ்வாதந்தர்யததையும், சேதனனுடைய அபராதத்தையும் கண்டு அகலமாட்டாள்"

1) எம்பெருமானை ஒரிமையும் விட்டுப் பிரியாமல் பிராட்டியார் இருப்பதன் காரணம் யாது?

பெருமானோ சுதந்தரத் தன்மை உடையவனாய் இருக்கிறுன். அதாவது, எதையும தன் விருப்பம் போல் செய்பவனாக உள்ளான்.

சேதனனோ அளவில்லாத குற்றங்களைச் செய்பவனாக இருக்கிறுன்.

பெருமானுடைய சுதந்தரத் தன்மையையும், சேதனனுடைய குற்றங்களையும் கண்டு 'என்ன நேரிடுமோ' என்ற அச்சததினால் பிராட்டியார பெருமானை ஒரிமைப்போதும் அகலாமல உடனுறைநது வருகிறுர.

குற்றம செய்யும் சேதனனுக்குப் பெருமானால் தண்டனை கிடைத்து விடுமோ என்னும் அச்சமும், உலக உயிரகள் துன்புறக்கூடாதே எனனும அருளும் பிராட்டியார பெருமானை விட்டுப் பிரியாமல இருபபதறகுரிய காரணஙகளாகி விடுகினறன.

## மூலம் : 133

"சேதனனுக்கு இவை இரணடையும் நினைதது அஞ்ச வேணடா."

1) சேதனனுக்குச் சேர்த்தியால் உண்டாகும் பயன் யாது?

பிராட்டியார் பெருமானோடு சேர்ந்து கொண்டு அருளநோககம் புரிவதனால், சேதனனுக்கு இரண்டு வகைகளில பயன ஏற்படுகிறது.

(1) "பெருமானுடன் சேர்ந்திருந்து உங்களை வாழச்செய்கிறேன்" என்று பிராட்டியார அபயகரம் காட்டி அருள் புரிவதால், பெருமானின் சுதந்தரத் தன்மையைக் கண்டு சேதனன அஞ்ச வேண்டுவதிலலை.

(2) தான செய்யும் குற்றங்களுக்கு "என்ன தண்டனை கிடைத்துவிடுமோ?" என்று சேதனன் அஞ்ச வேண்டுவது மில்லை.

இவ்வாறு சேதனனுக்கு இரண்டு வகையான பலன்கள் ஏற்படுகின்றன.

## மூலம் : 134

"இத்தால, ஆச்ரயிககைககு ருசியே வேண்டுவது, காலம் பார்க்க வேண்டா என்கிறது."

1) 'மத்' என்னும் சொல்லால் (மதுப்பால்) கிடைக்கும் உட்பொருள் யாது?

பெருமானுககும பிராடடிககும எனறும உளள தொடரபைக குறிப்பது 'மத' எனனும சொல்.

பெருமானைப் பற்றுவதற்கு வேட்கையே வேண்டுவது. இருவரும் சேர்ந்திருக்கும் காலத்தைச் சேதனன் நோக்க வேண்டுவதில்லை என்பதுவே இச்சொல்லின் உட்பொருளாகும்.

'அகலகில்லேன் இறையும்'

என்று பெருமான் திருமார்பில் பிராட்டியார் என்றும் நீங்காது நிறைந்து கொண்டிருக்கிறுர்.

ஏனெனின் பிராட்டியார் பிரியும் காலமும், சேதனன் ஆர்வமுடன் வந்து பெருமானைப் பற்றும் காலமும் ஒன்ருக இருந்து விட்டால் என்ன செய்வது? அப்போது சேதனன் கதி ஏதாகுமோ? என்று கருதியே பிராட்டியார் இவ்வாறு பெருமானை இமைப்பொழுதும் நீங்காது நித்திய வாசம் செய்து கொண்டிருக்கிறுர்.

'மத்' என்னும் சொல்லால் கிடைககும் உட்பொருள் இதுவேயாம்.

## மூலம் : 135

"இவள் ஸந்நிதியாலே காகம் தலைபெற்றது; அது இல்லாமையாலே ராவணன் முடிந்தான்."

1) பிராட்டியாரின் கருணை நிறைந்த சந்நிதி சேதனனுக்கு இன்றியமையாதது என்பதற்குச் சான்று தருக.

பிராட்டியார் கருணையே வடிவமானவர். பெருமானின் சுதந்தரத் தன்மையை அடங்குமாறு செய்து, அவரிடமுள்ள அருள் தன்மையை மேலோங்குமாறு செய்பவர்.

இத்தகைய சிறப்புடைய பிராட்டியார் உடனிருந்த காரணத்தால் காகாசுரன் உயர் பிழைத்தான். பிராட்டியார் உடனில்லாது பிரிந்திருந்த காரணத்தால் பெருமானின் அம்புக்கு இலக்காகி இராவணன் உயிரிழந்தான்.

எனவே, இந்த ஸ்ரீமத் என்னும் பதத்தினால் பெருமானைப் பற்றுபவர் ஒவ்வொருவருக்கும் பிராட்டியாரின் சந்நிதி இன்றியமையாதது என்பது தெளிவாகிறது.

2) பெருமானுக்கும் பிராட்டிக்கும் உள்ள தொடர்பு என்றும் உள்ள ஒன்று என்னும் கருத்து இச்சான்றுகளால் முரண்படாதா?

முரண்படாது. ஏனெனில், பரமபதத்தில் பிராட்டியார் பெருமானோடு மலரும் மணமும் போன்று எப்பொழுதும் சேர்ந்தே இருக்கிறுர் என்பது உண்மையே!

ஆனால், பகவானின் அவதார காலங்களில் பெருமானுக்கேற்ப அவதாரம் செய்யும் பிராட்டியார் சீதாபிராட்டி என்றும் ருக்மிணி என்றும் பெயர் பெறுகிறுர். அத்தகைய அவதார காலங்களில் அவதரிக்கும் பிராட்டிக்கும் பெருமானுக்கும் மட்டுமே பிரிவும் சேர்க்கையும் உளதாகிறது.

எனவே பெருமானுக்கும் பிராட்டிககும் சேர்க்கையும் பிரிவும் உண்டு என்பதும் பொருத்தமானதேயாம்.

3) மூலம் 122லிருந்து 135 வரை கூறப்பட்டுள்ள செய்திகளைக் கூறுக.

துவயததின் முதல் வாககியம் "பெருமானுடைய இரண்டு திருவடிகளையும், உபாயமாகப் பற்றுகிறேன்" என்பதையும், இரண்டாம் வாக்கியம் "இருவர் சேர்த்தியிலும் கைங்கர்யத்தைச் செய்யப் பெறுவேனாக!" என்பதனையும் விளக்குகிறது.

ஸ்ரீ என்பது பெரிய பிராட்டியாருக்குத் திருநாமம். ஸ்ரீ என்பதற்கு இரண்டு வகையாகப் பொருள் கூறுவதுண்டு. சேதனன் பிராட்டியாரைச் சேவிக்கிறுன் என்பது ஒரு பொருள். பிராட்டியார் பெருமானைச் சேவிக்கிறுர் என்பது மற்ருெரு பொருள்.

பிராட்டியார் புருஷகாரமாகச் சொல்லப்படுகிறுர். சேதனன் செய்யும் அளவு கடந்த குற்றங்களைப் பெருமான் பொறுத்துக் கொள்வது பிராட்டியாருக்காகவே! பிராட்டியார் உலக மக்களுக்குத் தாயாக இருக்கிறுர். எனவே, உலக மக்களின் துக்கத்தைப் பொறுக்க மாட்டாதவராகவும், பெருமானுக்குப் பத்தினியாக இருந்து கொண்டு இன்பமூட்டுபவராகவும் இருத்தலின் பிராட்டியாரே குற்றமற்ற புருஷகாரமாக இருத்தற்கு உரியவராக இருக்கிறுர்.

ஆரவாரமுடைய அனுமனையே பொறுமையைக் கடைப்பிடிக்குமாறு செய்தவர் பிராட்டியார்! அவருக்கு இவர்தம் சொற்படி நடக்கும் பெருமானைப் பொறுமை காட்டுமாறு கேட்டுக்கொள்வது சாத்தியமான செயலேயாகும்.

'மத்' என்பது பெருமானுக்கும் பிராட்டியாருக்கும் என்றும் தொடர்பு உள்ளது என்பதைக் குறிக்கிறது. பெருமான் பரம புருஷனாக விளங்குகிறுன் என்னும் தத்துவம். பெருமான் பெரிய பிராட்டியா

ரோடு சேர்ந்திருக்கும் தன்மை யாலேயே உண்மையாகிறது.

சேதனர்கள் செய்யும் அள வற்ற குற்றங்களைக் கண்டு சுதந்தரத்தன்மையுடைய பெரு மான் கோபித்துக் கொண்டால், 'தீங்கு ஏற்பட்டுவிடப் போகி றதே!' என்று கருணையுள் ளத்தோடு பிராட்டியார் பெரு மானை ஒரிமைப்பொழுதும் பிரி யாமல் நித்திய வாசம் செய் கிறார்.

பெருமானும் பிராட்டியும் இவ்வாறு சேர்ந்திருப்பதனால், தான் செய்யும் குற்றங்களால் தண்டனை ஏதும் கிடைக்காது என்னும் நிம்மதி சேதனனுக்குக் கிடைக்கிறது.

பெருமானை அடைவதற்கு வேட்கை மட்டும் இருந்தால் போதும், பெருமானும் பிராட் டியும் சேர்ந்திருக்கிறார்களா என்று நோக்க வேண்டிய தில்லை.

இருவரும் சேர்ந்திருந்த போது காகாசுரன் வாழ்வு பெற் றான்; பிரிந்திருந்த போது இரா வணன் அழிவு பெற்றான்!

இச்செய்திகள் மூலம் 122 முதல் மூலம் 135 வரையுள்ளவற் றில் தெளிவாக்கப்பட்டுள்ளன.

'ஸ்ரீமத்' பதப் பொருள் முற் றிற்று.

(தொடரும்)



# கண்ணன் திருவடியே காண்

(நேரிசை வெண்பா)

கொஞ்சுதமிழ் தன்னைக் கற்றறிவாய்க் கொண்டன்பால்
தஞ்சமுற எண்ணியே தாழ்ந்துதொழு-நெஞ்சத்தின்
திண்ணமுறும் நாட்டத்தால் செங்கண் திருமாலாம்
கண்ணன் திருவடியே காண்.

ஒருவரமே வேண்டி உரியவழி நாடித்
திருவருளே தந்தருளும் சீரார் - திருமகள்தன்
கண்ணின் விழியருளைக் காணக் கசிந்தென்றும்
கண்ணன் திருவடியே காண்.

என்றும் ஒளிர்கின்ற இன்னருளே கண்டுயனம்
இன்றே இணைகின்ற ஏற்றத்தால்-நன்றிலங்கப்
பண்ணும் தமிழ்ப்பனுவல் பாடியருட் பக்தியினால்
கண்ணன் திருவடியே காண்.

நின்றுணரும் நெஞ்ச நிறைவின் நிமித்தத்தால்
நன்றுணரும் வண்ணம் நலமிணைய-என்றென்றும்
எண்ணும் இசைவின்கண் இன்பமே எய்தியருட்
கண்ணன் திருவடியே காண்.

வஞ்சமிலா வண்ணம் மறுவின்றி மாதவன்றன்
கஞ்சமலர்ப் பாதத்தைக் கண்டுய்ய - நெஞ்சுறவே
எண்ணும் முடிபின் இயைந்தஅருட் பான்மையினால்
கண்ணன் திருவடியே காண்.

உற்ற பயன் தன்னை உணர்ந்தருளாற் காண்கின்ற
பெற்றிதனைச் சார்கின்ற பேறறிவைப்-பெற்றுய்யக்
கண்ணனின் விழியெழிலைக் காட்டி அருள்கின்ற
கண்ணன் திருவடியே காண்.

நேர்மையினை எண்ணி நியதிதனை நன்கறியும்
சீர்மையினைக் காணும் தெளிந்தமன - ஓர்மையினால்
மண்ணின் மரபறிந்து மன்புகழே பெற்றிலங்கக்
கண்ணன் திருவடியே காண்.

மருளார்ந்த பேயாம் மனயிருளை ஓட்டித்
தெருளார்ந்த சிந்தையின்கண் தேற-அருளார்ந்த
கண்ணின் ஒளியாற் கருணைதனை நல்குகின்ற
கண்ணன் திருவடியே காண்.

சிந்தனையால் தேர்ந்தறியும் செந்நெறியின் சீரொழுக்கச்
சந்தப் பனுவல்கள் சாற்றிவளர்-செந்தமிழைப்
பண்ணிசைத்துப் பாடிப் பலநலமும் பெற்றுய்யக்
கண்ணன் திருவடியே காண்.

சீர்மகளாம் தெய்வத் திருமகளாம் தேனமுதின்
பேர்மகளாம் செல்வப் பெருமகளாம்-பார்மகளாம்
தண்ணருளே நல்குந் தனிச்செல்வி மாண்பறியக்
கண்ணன் திருவடியே காண்.

--கவிஞர் மா. வெயிலுமுத்து - மதுரை.

*மதிப்புரை*

# ஸ்ரீமாதா

தெலுங்கில் எழுதியவர் - அன்னை தியாகீசானந்தபுரி
தமிழில் மொழிபெயர்த்தவர் - அ. நடராஜன்
வெளியீட்டாளர் - சுவாமி அனுபவானந்தயோக கேந்திரம்
பீமுனிபட்டினம், விசாகப்பட்டின மாவட்டம் ஆந்திர மாநிலம்-531163
வெளியீட்டு எண். 042, * பக்கங்கள் 75, * இலவச வெளியீடு.

ஸ்ரீமாதா என்ற பதம் ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தின் முதல் நாமாவாகும். சக்தி தத்துவத்தைக் கூறும் இந்த நூலுக்கு "ஸ்ரீமாதா" என்ற பெயர் மிகவும் பொருத்தமாகும். உலகமே சக்தி வடிவம் என்பதை பல நூல்களிலிருந்து எடுத்துக்காட்டுகளினாலும், கதைகளினாலும் கூறி சக்தி தத்துவத்தை விளக்கப்பட்டுள்ளது. "துர்க்கா ஸப்தசதி" யில் கூறப்பட்ட "யா தேவீ ஸர்வபூதேஷு சக்திரூபேண ஸம்ஸ்திதா' ' என்ற வாக்யத்தைக் கொண்டு சக்திதான் எல்லாவற்றிற்கும் காரணம் என்பதனையும் சக்தி இல்லையென்ருல் உலகமே இல்லை என்பதனையும் விளக்கிக் கூறுகிறது இந்த நூல்.

பகவத்கீதை, விவேகசூடாமணி, உபநிஷத்துக்கள், தேவீ பாகவதம், துர்காஸப்தசதீ, நிர்ணயஸிந்து, ஸஹஸ்ரநாமம் முதலிய நூல்களிலிருந்து பல உதாஹரணங்களை எடுத்துக் கூறி ஆசிரியர் சக்தி தத்வத்தை விவரிக்கிருர். மேலும் பத்ராசல ராமதாஸ், ஸ்ரீதியாகராஜஸ்வாமி, ஆகியோரின் கீர்த்தனைகளைக் கொண்டும் சக்திக்கு முக்யத்வம் கொடுக்கிருர் ஆசிரியர். "அஹம் ப்ரம்மாஸ்மி" என்ற மகா வாக்யக் கருத்துக்களைக்கூறி சக்திக்கு மேன்மையைச் சேர்க்கிருர். சித்திரை மாதத்தில் வரும் வஸந்த நவராத்ரி, ஆவணி மாதத்தில் வரும் கணபதி நவராத்தி, புரட்டாசி மாதத்தில் வரும் தேவி நவராத்திரி, இந்த மூன்றுநவராத்திரிகளுமே தேவீ பூஜைக்கு உகந்தன என்று கூறுகிருர்.

"மானவ" என்று சொல்லிற்கு புதுமாதிரியான விளக்கமும் தருகிருர். . ஜோதிட சாஸ்த்ர முறையிலும், யோக சாஸ்த்திரி அடிப்படையிலும், தந்த்ர சாஸ்த்ர அடிப்படையிலும் சக்தி தத்துவத்தை தெளிவாக விளக்குகிருர்.

ஆசிரியர் ஸ்ரீராமகிருஷ்ணருடைய பக்தி மார்க்கத்தை அனுஸரிப்பவர் என்பது ஆசிரியர் கூறும் பல ராமகிருஷ்ணருடைய கொள்கை விளக்கத்தினால் தெரிய வருகிறது. ஸ்ரீராமகிருஷ்ணர் சக்தி வடிவமான காளியை வழிபட்டதால் ஸ்ரீராமகிருஷ்ணருடைய பக்தி நெறியையும், சக்தி உபாஸனையையும் ஆணித்தரமாகக் கூறுகிருர். முடிவில் பக்திதான் முக்கியம் என்பதனை புராணக் கதைக் கொண்டு நிலைநிறுத்துகிருர். சில இடங்களில் வேதாந்த கருத்துக்களைக்கூறி பக்தி நெறிக்கு மேன்மையைக் கூட்டுகிருர். ஆகையால் இநநூல் சக்தியை வழிபடுபவர்கள் வரவேற்பார்கள் என்பதில் ஐயமில்லை. இந்த நூலை எழுதியவர் ஸ்ரீஅனுபவானந்த சுவாமிகளின் சிஷ்யை. ஆகையால் தன் குருவின் கருத்துக்களையும் கையாண்டுள்ளார். இந்நூல் தெலுங்கு மொழியில் எழுதப்பட்டு தமிழில் மொழி பெயர்ப்புச் செய்யப்பட்டுள்ளது. மொழிபெயர்ப்பு தெளிவாகவும், விளக்கமாகவும் உள்ளது. மொழிப் பெயர்த்தவர் சில மரபுச் சொற்களுக்கு அந்தந்த பக்கத்தில் விளக்கம் கொடுத்திருப்பது * குறிப்பிடத்தக்கது. இந்த நூல் திருமலை திருப்பதி தேவஸ்தான பொருளுதவியால் அச்சிடப்பட்டிருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும்.

# சாதன ரகசியம்

தெலுங்கில் எழுதியவர் - ஸ்ரீஅனுபவானந்த சுவாமிகள்
தமிழில் மொழிபெயர்ப்பு - பன்மொழிப்புலவர் மு.கு. ஜகந்நாத ராஜா
வெளியீட்டாளர் - அநுமானந்த கிரந்த மாலா
பாபட்லா, குண்டூர் மாவட்டம்-522101 ஆந்திர மாநிலம்.
விலைரூ. 35-00, * பக்கங்கள் 198,

இந்த "சாதன ரகசியம்" என்ற நூல் ஸ்ரீஅனுபவானந்த ஸ்வாமி அவர்கள் தன் சிஷ்யையான அன்னை தியாகீசானந்தபுரி என்ற சகோதரி அவர்களுக்கு அத்வைத வேதாந்த

கருத்துக்களைப் பற்பல தலைப் புக்களில் எழுதப்பட்ட கடிதங்க ளின் தொகுப்பு.

இந்த நூலில் அத்வைத வேதாநத கருத்துக்களை மிக சுலபமான வழியில் தெரிந்து கொணடு பயன்படக்கூடிய முறையில் தெளிவாகவும், விளக் கமாகவும் கொடுககப்பட்டுள ளன. அத்வைத ஞானத் தைப் பல ஆண்டுகள் குரு மூலமாகக் கற்றுத் தெரிந்து கொள்ளக்கூடிய விஷயங்களை ஸாதாரண முறையில் கருத்து நிறைந்ததாகத் தெளிவுபடக்கூறி யுள்ளார். மொத்தக் கடிதங்கள் 37 ஆகும். ஒவ்வொரு கடிதமும் ஒவ்வொரு தலைப்புக் கொண்ட தாகக் காணப்படுகின்றது. ஒவ் வொரு கடிதமும் ஒன்று முதல் மூன்று பக்கங்களுக்கு மேற்ப டாமல் இருக்கின்றன. ஒவ் வொரு கடிதத்திற்கும் தொடரபு காணப்படுகிறது. கடித ஆரம் பத்தில் "அன்புள்ள மாதாஸ்ரீ" என்று ஸம்போதனத்துடன் ஆரம்பிக்கப்பட்டுக் காணப்படு கிறது. ஒவ்வொரு கடித

மும் சுருக்கமாக இருந்தா லும் சுவைபடக்கருத்துக்களைத் தெளிவுபடுததியுள்ளார் ஆசிரி யர். பொதுவாக வேதாநத ஞானம் வேறு, வேதாநத சாஸ்த் ரம் வேறு. ஆனால் ஆசிரியர் இரண்டிறகும் உளள வேறு பாட்டைக்கூறி ஒன்றுக்கொனறு சம்பந்தமுண்டு என்பதை அழ காக புரியும்படி எழுதியுள் ளார். வேதாந்த சாஸ்த்திரத் திற்கு அடிப்படையாக நியா ய்சாஸ்த்திரம், பூர்வமீமாம்ஸா சாஸ்த்திரம் தேவை என்பதை சுருக்கமாகவும் விளக்கமாகவும் கூறியுள்ளார். மேலும் "யமநி யம ஆஸன" முதலான எட் டுவித யோகங்களைப் பற்றி யும் "அஹிம்ஸை ஸதய" முத லிய ஐநதுவித யமஙகளைப பறறியும் விரிவாகக கூறியுள ளார. ஸாஙகய சாஸததிரததை யும், கரம, ஞான யோகஙக ளைக கூறி அதவைத வேதாந தத்திறகு எவ்வளவு தூரம் பய னளிககும் எனபதனையும விளக்கியுளளார். "ப்ரஸதானத ரயம்" என்றால் எனனவெனபத னையும் அதனுடைய விவ ரத்தையும் கூறியுள்ளார். இவ விதம் பல கடினமான விஷ யத்தை தன அனுபவ முதிரச்சி யாலும், ஞானத்தினாலும சுல பமாகப் புரியும்படி கூறியிருப் பது குறிப்பிடத்தக்கது.

இவ்விதம் கடிதங்கள் மூலம் பல விஷயங்களும் எழுதிய தேதி விவரங்களும் நூலில் குறிப்பிடப்பட்டுள்ளன. அதா வது 2-1-46 முதல் கடிதம் ஆரம்பிக்கப்பட்டு 20-3-46 வரை எழுதப்பட்ட கடிதங்கள் இடம்பெற்றுள்ளன. ஆனால் தேதிகள் தொடர்புடையதாகக் காணப்படவில்லை. ஸ்ரீஸ்வாமி கள் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம் ஸரின் வழியைப் பின்பற் றியே வேதாந்த கருததுகக ளைக் கூறுகிறார். ஸ்ரீசாரதா தேவியிடமும், ஸ்ரீபரமஹமஸரி டம மிகுநத பகதியுடையவர எனபதை நூலின வழியாக அறியமுடிகிறது. பொதுவாக வேதாநத கருததுககளை சுலப மாக, தெளிவாக அறிய இநத நூல மிகவும பயனுடையதா கும எனபதில சநதேகமிலலை.

தெலுஙகில எழுதிய இநத நூலை பனமொழிப்புலவர மு.கு. ஜகந்நாதராஜா மிக அருமையாக மூலநூல் கருத துககளை விடாமல் மாற்றுமல தமிழில மொழிபெயர்த்திருப் பது மிகவும் பாராட்டவேண்டி யதாகும்.

பல நற்கார்யங்கள் செய்து வரும் திருமலை திருப்பதி தேவஸ்தானம் இந்நூலை அச் சிடுவதற்குப் பொருளுதவி செய் திருப்பது மிகவும் பொருத்த மானதே. பொதுவாக நன் மனம் படைததவர்களின் வீட் டில் இருகக வேண்டிய நூல் இது. எல்லோரும் படித்து நற் பயன் பெறலாம்.

டாக்டர் T.G.
அனந்த சுப்ரமணியன்
அம்மாபேட்டை.

★ ★ ★

## கொஞ்சம் யோசியுங்கள்

குரோதம்
புத்தியை விழுங்கி விடுகிறது.
கர்வம்
அறிவை விழுங்கி விடுகிறது.
ப்ராயச் சித்தம்
பாவத்தை விழுங்கி விடுகிறது.
பேராசை
நாணயத்தை விழுங்கி விடுகிறது.
லஞ்சம்
நியாயத்தை விழுங்கி விடுகிறது.
கவலை
வயதை விழுங்கி விடுகிறது.

அனுப்பியவர்
தி.வி. பார்த்தசாரதி - காஞ்சிபுரம்.

# நாராயணன் என்னும் நலம் தரும் சொல்

புலவர் பொன். சுப்பிரமணியன் - இராசபாளையம்.

நாராயணன் என்னும் நலம் தரும் சொல்லுக்குப் பலப் பல பொருள்கள் உண்டு. ஆங்காங்கே அவ்விடத்திற்கு ஏற்ற பெற்றியில் அச்சொல்லுக்குப் பெரியோர்கள் பல வகைப்பொருள்களை உணர்த்துவர். "புருஷகார பலத்தாலே சுவாதந்தரியம் தலை சாய்ந்தால், தலையெடுக்கும் குணங்களைச் சொல்லுகிறது நாராயண பதம். அவை வாத்சல்யமும், சுவாமித்துவமும், சௌசீல்யமும், சௌலப்பியமும், ஞானமும் சக்தியும் என்பன" என்று பிள்ளை லோகாசிரியார் தாம் இயற்றிய முமுட்சுப்படி என்னும் நூலில் அருளிச்செய்துள்ளார்.



**வாத்சல்யம் :**

பசு தன் கன்றினிடத்திலே கொண்டிருக்கும் பரிவு. பசுவானது தான் ஈன்ற கன்றினுடைய உடம்பின் மீதிருக்கும் அழுக்காகிய வழும்பினையும் விரும்பியுண்ணும்; தன் பாலை உண்ணக்கொடுத்துக்கன்றை வளர்க்கும் அக்கன்றுக்கு ஊறு செய்பவர்களைத் தன கொம்பாலும் குளம்பாலும் எதிர்த்து, தன் கன்றுக்கு யாதொரு ஊறும் நேராதபடிப் பாதுகாக்கும். அதுபோல இறைவனும் அடியவர்களின் குற்றங்களை "என்னடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார்" என்று விரும்பி ஏற்று மகிழ்வான். அவர்களுக்குத தீங்கு ஏதும் நேராமல் அவரகளைப் பெருங்கருணையுடன் பாதுகாத்து அருளவான். இறைவனின் இவ் வியல்பே வாத்சல்யம்.

**சுவாமித்வம் :**

உடைமையை உடையவனாய் இருக்கும் இயல்பு சுவாமித்துவம் எனப்படும். சேதனன் ஆகிய உயிர் தன்னைப் புறக்கணித்து விமுகனாக இருப்பினும், அவனை கைவிட்டொழிக்க மனம் வாராமல் எப்படியாயினும் ஆட்கொண்டு காத்

தருள்வதற்கே விரும்பி எதிர்ச் சூழல் புக்குத் திரிவதற்கு உரியபடி உயிர்களுக்கும் இறைவனுமுள்ள உறவு முறைமை சுவாமித்துவம் ஆகும்.

**சௌசீல்யம் :**

தான் உயர்வற உயர்ந்தவனாய் இருப்பினும் எத்துணை இழிந்தவரோடும் யாதொரு வேறுபாடுமின்றி ஒருங்கே மேல் விழுந்த புரையறக் கலந்து பழகித் தண்ணளி புரியும் பண்பு.

**சௌலப்யம் :**

எத்துணையும் உயர்ந்த இறைவன் எத்துணையும் எளிவந்து, யாவரும் சுலபமாகத் தன்னைப் பற்றிக் கொள்ளும்படி தன் வடிவைக் கண்ணுக்கு இலக்காக்கும் எளிமைத் தன்மை.

**ஞானம் :**

உயிர்கள் கீழ்நின்ற நிலையையும், அவைகளை மேல் உய்த்துத் காத்தற்குரிய வழி வகைகளையும் அறிந்திருக்கும் தன்மை.

**சக்தி :**

அங்ஙனம் தான் அறிந்தபடி சேதனர்களின் குற்றங்களையும் இழிவுகளையும் போக்கி, அவற்றிற்குத் தன்னைக் கொடுத்து நலம் செய்தற்குரிய பேராற்றல்.

நாராயணன் என்னும் நலம் தரும் சொல் இந்த ஆறு பெரும் திருப்புண்புகளைச் சிறப்பாக உணர்த்தி மகிழ்கின்றது.

சிறந்த இந்த ஆறு தெய்வீகப் பண்புகளும் திருவரங்கத்தில் எழுந்தருளியுள்ள நம் பெருமாள் திருவுருவ அமைப்பில், தெற்றென விளங்குகின்றன என்று பெரியோர்கள் கூறுவர். பெருமாள் தமது திருக்கைகளிலே முறையே தரித்துக் கொண்டுள்ள திருவாழி திருச்சங்கு என்னும் திவ்விய ஆயுதங்கள அவர்தம் ஞானம, சக்தி என்னும பண்புகளை உணர்த்துகின்றன. அடியார்களை நோக்கி அஞ்சேல் என்று அருளிச்செய்யும் நிலையிலுள்ள அபய அஸ்தம் என்னும் திருக்கை, அவரது வாத்சல்யம் என்னும் பண்பைக் குறிக்கும் அவரது திருமுடி அனைத்திற்கும் அனைவருக்கும் தலைமை நிலையில் விளங்கும் அவர்தம் சுவாமித்துவத்தைப் புலப்படுத்தும். அவர்தம் திருமுகமும் புன்முறுவலும், அவர்தம் சௌசீல்யத் தன்மையைச் சுட்டும். ஒளிமிக்க அழகிய தாமரை மலரப்பீடத்தில அவர் தம திருவடிகளை ஊன்றி நிற்கும் நிலை அவருடைய எளிமை என்னும சௌலப்பியத் தன்மையைச் சாலவும் விளக்கும்.

இங்ஙனம் ஞானம், சக்தி வாத்ஸல்யம், சுவாமித்துவம், சௌசீல்யம், சௌலப்பியம் என்னும் ஆறு திருக்குணங்களும் ஒருங்கே அழகுற அமைந்து விளங்கும் திருவுருவைக் கண்டு, அவனடி புகழ்ந்து, நம்பிறவியைப் பயனுள்ளதாக ஆக்கிக் கொள்வோம்.

## மூன்று

1. இந்த மூன்று பொருள்களும் யாரையும் எதிர்பார்க்காது.
   1) நேரம். 2) மரணம் 3) வாடிக்கைக்காரன்
2. இந்த மூன்று பொருள்களும் சகோதரனை விரோதியாக ஆக்கி விடுகிறது.
   1) பணம் 2) மனைவி 3) நிலம்
3. இந்த மூன்று பொருள்களை ஞாபகத்தில் வைத்திருக்க வேண்டும்.
   1) உண்மை 2) கடமை 3) மரணம்
4. இந்த மூன்று பொருள்களை யாரும் திருட முடியாது.
   1) புத்தி 2) நடத்தை 3) திறமை
5. இந்த மூன்று பொருள்கள் போனால் திரும்பி வராது.
   1) வில்லிலிருந்து அம்பு 2) வாயிலிருந்து சொல் 3) உடலிலிருந்து உயிர்.
6. இந்த மூன்று பொருள்கள் வாழ்க்கையில் ஒருமுறை தான் கிடைக்கும்.
   1) தாய் 2) தந்தை 3) இளமை
7. இந்த மூன்று பொருள்களை மறைக்க வேண்டும்.
   1) செல்வம் 2) ஸ்திரி 3) சாப்பாடு
8. இந்த மூவரை மரியாதை செய்.
   1) தாய் 2) தந்தை 3) குரு.

அனுப்பியவர் :
தி.வி. பார்த்தசாரதி, காஞ்சிபுரம்.

# சேக்கிழார் போற்றிய கற்பின் சிறப்பு

திருமதி. மா. தியாகவல்லிமணி - வேலூர்.

உலகில் மிக உயர்ந்த மக்கட்பிறவியைப் பெற்றுள்ள மனிதன், மனிதப் பிறவியின் பயனை அடைந்திடுதல் வேண்டும். உயர்ந்த குறிக்கோளை அடைவதற்கே உயர்ந்த பிறப்பு நமக்குத் தரப்பட்டுள்ளது. இந்த நல்லுணர்வோடு வாழ்பவரே உலகில் மனிதராவர். இப்பிறவிப்பயனை அடையும் வழிகளில் இறைவழி நிற்றல் முதன்மையானது. இதனை நம் இந்து சமயத்தில் ஆழ்வார்களும், நாயன்மார்களும், மேலான குருமகா சந்நிதானங்களும் தெள்ளத்தெளிவாய் விளக்கக்காண்கிறோம்.

"அறவாழி அந்தணன் தாள்
சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல்அரிது"

என்பது வள்ளுவர் வாக்கு. இத்திருக்குறளில் இறைவனை அறத்தின் வடிவிலேயே காணும் திருவள்ளுவர், அந்தணன் (அம்+தணன்) அழகிய தண்மை பொருந்தியவன் அறவடிவினன் என்று குறிக்கின்றனர். மனிதப்பிறவியில் நம்மைத் தாக்கும் பொருளும் இன்பமும் ஆகிய இரு கடல்களும் நம்மை மூழ்கச் செய்யக் கூடியவை. இத்துன்பங்களிலிருந்து நம்மைக் காத்துக்கொள்ள இறைவன் திருவடிகளைச் சேர வேண்டும். இறைவன் திருவடிகளைச் சேர்ந்தார் இப்பிறவிக் கடலைக் கடந்து பேரின்ப வீடு அடைவர்.

## அறநெறி :

இறைநெறி பற்றிட நல்லொழுக்கநெறி அடிப்படையாய் அமைந்திடும் நல்லொழுக்கத்தின் வழி நிற்றல் அறிவழி நிற்றல் ஆகும். அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் நான்கும் நீங்கிய நிலையே அறம். அவை நீங்கிய நிலை எய்தப்பெருமாயின் மேலோர் போற்றும் பெரும்புகழ் நம்மைத் தாமே வந்தடையும்.

## கற்புநெறி :

அறநெறிகளில் தலையாயது கற்புநெறி. நன்னெறி தவறாத வாழ்வு கற்புடைய வாழ்வு. கற்பு ஆண், பெண் இரு பாலர்க்கும் உரியது. இதனை மகாகவி சுப்ரமண்ய பாரதியார்,

"கற்புநெறி என்று சொல்ல
வந்தார் இருகட்சிக்கும்
அஃது பொதுவில் வைப்போம்"

என்று தெளிவுபட விளக்குகின்றார்.

பிறரால் வலியுறுத்தப்படுவது அன்று கற்பு. அவரவர் தம் நிறை காக்கும் தனமையே கற்பு. கற்பு நிறையப்பெற்றோர் தாம் உய்வதுடன் இவ்வுலகையே உய்வு பெறச் செய்வர். மேலோர் போற்றும் பெரும்பேறும் அடைந்து மகிழ்வர். கற்பின் சிறப்பினைப் பற்றி விளக்கும் பெரியோர் கருத்துக்களும் ஈண்டு ஆழ்ந்து நோக்கப்பெறுவது நலம் பயக்கும்.

## கற்பின் சிறப்பு :

மானக்கஞ்சாற நாயனார் புராணத்தில் அவர்தம் மனைவியாரின் கற்பின் மேம்பாடு குறித்தும், அவர் திருமகளார் பெற்றோர்க்குச் செய்யும் பேருதவியைக் குறித்தும் சேக்கிழார் பெருமான் அருளிச்செய்த பெரியபுராணத்தில் அமைந்துள்ள பாடல் சிந்தித்து மகிழ்தற்குரிய பாடலாகும்.

"குழைக்கலையும் வடிகாதில்
கூத்தனார் அருளாலே
மழைக்குதவும் பெருங்கற்பின்
மனைக்கிழத்தியார் தம்பால்
இழைக்கும் வினைப்பயன் சூழ்ந்த
இப்பிறவிக்கொடுஞ்சூழல்
பிழைக்கும் நெறி தமக்குதவப்
பெண்கொடியைப்பெற்றெடுத்தார்

இப்பாடலில் மானக்கஞ்சாறர் மனைவியின் கற்பின் சிறப்பு, "மழைக்குதவும் பெருங்கற்பின் மனைக்கிழத்தியார்" எனப் பாராட்டப்பெறுவது கற்பின் மேன்மையைத் தெளிவாக விளக்கும். உலக வளர்ச்சிக்கென பெய்யும் மும்மாரிகளில் ஒரு மாரி (ஒரு மழை) கற்பு நெறி தவறாத பெண்ணரசியரால் உண்டாகின்றது. இதனை,

"வேதம் ஓதும் வேதியர்க்கொரு மழை
நீதி மன்னர் நெறியினுக்கு
ஒருமழை
மாதர் கற்புடை மங்கையர்க்கு
ஒருமழை
மாதம் மூன்று மழையெனப்பெய்யுமே!"

என்னும் விவேக சிந்தாமணிப் பாடல் விளக்குகிறது. இவ்வா

ளுக நாடு நலம் பெறச் செய்த வர் கற்புடைய பெண்டிர். அவர் களுள் மானக்கஞ்சாறர் மனைவி யும் ஒருவராய்ப் போற்றப்படு கின்றார்.

### பெற்றோர்க்குதவும் பெண் :

மானக் கஞ்சாறர் பெற்ற மக ளைப் "பிறவிக் கொடுஞ்சூழல் பிழைக்கும் நெறி தமக்குதவும்.

பெண்கொடி" எனப் போற்றுகி றார் சேக்கிழார். மானக்கஞ் சாறர் மகள் புண்ணியவர்த்தி னியை ஏயர் கோன் கலிக்காம ருக்கு மணஞ்செய்யும் வேளை; இறைவன் மாவிரதர் வடிவங் கொண்டு வந்து செழித்து நீண்ட பூங்குழலைக் கண்டு "இவள் கூந்தல் நமக்குப் பஞ்சவ டிக்கு ஆகும்" என்றார். பஞ்சவடி என்பது மாவிரதிகள் தம் மார் பில் அணியும் மயிர்ப்பூணூல். கேட்டவுடன் மானக்கஞ்சாரர் தம் மகள் கூந்தலை உடைவா ளால் அடியோடு அரிந்து அடி யவரிடம் கொடுத்தார். அடிய வராக வந்த இறைவன் வாங்கு பவர் போலக் காட்டி மறைந்து விசும்பில் உமையம்மையாருடன் விடைமீது காட்சி கொடுத்தரு ளினார். இறையருளால் மலர்க் கூந்தல் வளர்ந்தது. திருமகளின் திருமணமும் இனிதே நடந்தது. இவர்தம் வரலாறு பெண் குழந் தைகளுக்கு ஒரு சிறந்த வழி காட்டி. பெற்றவரதம் பிற விப்பெரும் பயன்தேடித்தந்த மகள் எனப் போற்றப்படுகிறாள். பின்இல்லறத்திலும் கறபுக்கரசி யாய்த திகழ்ந்து நலலறம் ஆற றியவள் மானக்கஞ்சாறர் மகள் புணணியவர்ததினி.

### கற்புக்கனல் :

பெண்களின் கற்பை நெருப் புக்குச் சமமாகக் கூறுவர். கண் ணகியின் கற்புக்கனல் மதுரை மாநகரையே எரித்ததைச் சிலப் பதிகாரம் காட்டுகிறது. பெரிய புராணத்தில் திருநீலநகக நாயனார் வரலாற்றில் சேக்கி ழார் திருச்சாந்தமங்கை எனும் ஊரில் வாழும் அந்தணர் கள் இல்லங்களில் அந்தணர் வேட்கும் ஆகவனீயம், காருகா பத்தியம், தக்ஷிணாக்கினி என்ற முத்தீயோடு பெண்கள் பேணி வளர்க்கும் கற்புக் கனலும் சேர்ந்து நால்வகைத் தீ வளர்க் கப்படுகிறது என்று கூறுகி றார். இல்லத்தின்கண் கற்பு நெறி தவறாது மனையறம் பேணும் பெண்களே குடும்பத் திற்கு வேர்போல் விளங்குப வர்கள். இதனை சிறுத் தொண்டநாயனாரின் மனைவி திருவெண்காட்டு நங்கை என் பாரை,

"மனையறத்தின் வேராகி விளங்கும் திருவெண்காட்டு நங்கை"

எனச் சேக்கிழார் மேலும் போற் றியுரைப்பதன மூலம் நாம் நன்கு அறியலாம.

### இறையருள் :

இவ்வுலகு இறைவன் திருவரு ளாலேயே இயங்குகிறது. அவ னன்றி ஓரணுவும் அசையாது. நல்லவராயினும், கெட்டவராயி னும், கெடுங்காலத்துக் கெடுப் பதும், நரகதிகளில் விடுங்கா லத்து உய்விப்பதும் வினைக் கேற்ப நடத்தும் நடுநிலையா ளன் இறைவனே! இதனை நன் குணர்ந்து நம்மை நாமறிந்து ஒப்பற்ற இறையருளால் இனி யவே ஆற்றி உய்வு பெறல் வேண்டும். அன்றும் இன்றும் என்றும் நன்நெறி நிற்றலில் மேலான கற்புநெறியின் மேன் மையை ஆய்ந்தறிந்து, மேற் கண்ட கருத்துக்களை நினை வில் போற்றி, கற்பின் கன லாக யாவரும் விளங்கி; நாம் வாழும் நாடும், இவ்வுலகும் உய்வு பெறச்செய்திடுவோம்!



1. செலவததால் சாப்பாடு கிடைககிறது.
   ஆனால் சுகம் கிடைக்காது.
2. செல்வத்தால் மருந்து கிடைக்கிறது.
   ஆனால் ஆரோக்கியம் கிடைக்காது.
3. செல்வததால் கலவி கிடைககிறது.
   ஆனால் அறிவு கிடைக்காது.
4. செல்வததால் நணபரகள கிடைபபாரகள.
   ஆனால் உண்மை நட்பு கிடைக்காது.
5. செல்வத்தால் உறவு கிடைக்கும்.
   ஆனால் அமைதி கிடைக்காது.
6. செல்வத்தால் நகைகள் கிடைக்கும்.
   ஆனால் அழகு கிடைக்காது.
7. செல்வத்தால் சுகம் கிடைக்கும்.
   ஆனால் ஆனந்தம் கிடைக்காது.

அனுப்பியவர் :
தி.வி. பார்த்தசாரதி, காஞ்சிபுரம்.

# விநாயகி

திரு. சீ. இலட்சுமணன் - சிங்கம்புணரி.



"ஒன்றே குலம், ஒருவனே தேவன்", "பேராயிரமுடைய பெம்மான்; 'ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க", "பலவகையாகப் பரவிடும் பரம்பொருள் ஒன்றே" என்பன தமிழ்ச்சான்றோர்களின் அறிவுரைகள்; ஆய்வுரைகள்; இவை இறைவன் ஒருவனே எனும் கருத்தை வலியுறுத்தினாலும் வழிபடும் மாந்தரின் மனப்பக்குவம், வழிபாட்டு நெறி, புராண இதிகாச கதைகள் ஆகியவற்றிற்கேற்ப இறைவனின் திருவுருவங்களும், பெயர்களும் மாறுபடுகின்றன. பலவாகப்பெருகுகின்றன. பழமையான ரிக்வேதம் "இறைவன் எனும் உண்மைப் பொருள் ஒன்றே. அப்பரம்பொருள் படைத்தல், காத்தல், அழித்தல் எனும் முத்தொழிலையும் புரிகின்றது" எனக்கூறுகிறது காத்தல் தொழில் செய்யும் இறையாற்றல் 'விஷ்ணு' எனும் தெய்வமாக வழிபடப்பட்டது. பின்னர் அப்பரமாத்மா 'தசாவதாரக்கடவுளாகவும், வேறுபல பெயர்களாலும் அழைக்கப்பட்டார்; வழிபடப்பட்டார்.

பரம்பொருள் ஒன்றேயாயினும் அதனுள் அதன் ஆற்றல் அடங்கியிருக்கிறது. சூரியன் ஒருவனே. ஆனால் அவனிடத்து சுடுதல், காயவைத்தல், ஒளிருதல் ஆகிய ஆற்றல்கள் அடங்கியிருப்பதை யாவரும் அறிவோம். இன்றைய விஞ்ஞான அறிவும் அச்சூரிய ஆற்றலால் சமைத்தல், மின்னாற்றலை வெளிப்படுத்தல் ஆகிய பலவற்றைச் செய்வதை அனைவரும் நன்கு அறிவோம். இதனையே இன்றைய அறிவியல் உலகம் பொருள், ஆற்றல் எனக் கூறுகிறது. இவை ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்க முடியாமல் இணைந்தே செயல்படும் எனக்கூறுகிறது. பழந்தமிழர் இதை இறைவனும், இறையாற்றலும் எனக்கூறினர். திருமாலும் அவரது மார்பில் இலக்குமியும் இணைந்து "திருவாழ் மார்பன்" எனத்தொழப்படுகிறார்.

சைவ சமயம் இத்தத்துவத்தைச் சிவம் சக்தி எனக்கூறும். சிவத்தினின்றும் சக்தியையும் சக்தியினின்றும் சிவத்தையும் பிரிக்க முடியாது; சிவம் தனித்திருக்கும் போது சிவனென்றும், செயல் படும் கால் சக்தியெனவும் வழங்கப் படுமென்பர் ஆன்றோர். இவ்வாறே மகேஸ்வரனின் ஆற்றல் மகேஸ்வரி எனவும், பிரம்மாவின் சக்தி பிரம்மி எனவும், நரசிம்மனின் சக்தி நரசிம்ஹி எனவும் பெயரிடபபட்டனர். கி.பி. ஆறும் நூறறாண்டில் தோன்றிய "பிரகத் சம்ஹிதா" எனும் நூல் தாய்த் தெய்வங்கள், அவ்வவ் தெய்வங்களுக்குரிய ஆண்பால தெய்வங்களின் உருவ அமைப்பையும், பெற்றிருக்க வேண்டிய ஆயுதங்களையும் குறிக்கிறது. கி.பி. 9-10 ஆம் நூற்றாண்டில் தோன்றிய "உத்பலா" என்ற அறிஞர் பெருந்தகை தமது "பிரஹத்சம்ஹிதா" விளக்கவுரை நூலில் பின்வருமாறு குறிக்கிறார்: "மகேஸ்வரி, பிராமி, வைஷ்ணவி முதலிய தாய்த்தெய்வங்களைக் குறிப்பிட்டு விட்டு இறுதியாக "நரசிம்ஹி, வராகி வைநாயகி" ஆகிய பெண் தெய்வங்களைக் குறிப்பிட்டு விளக்குகிறார்.

விநாயகி எனும் பெண்பால் விநாயகருக்கு வைநாயகி, விக்னேசுவரி, கணேசினி, கணேஸ்வரி கஜானனா, ஐங்கிணி என்ற பெயர்களுமுண்டு. இத்தெய்வம் இந்து, பௌத்த, சமண சமயத்தார்களால் ஒரு காலத்தில் சிறப்பாக வழிபடப்பட்டது. இந்து சமயத்தில் "சக்தி கணபதி" என்ற பெயராலும் இத்தாய்த்தெய்வம் வழிபடப்பட்டது. காணபத்யமும், தாந்திரீக வழிபாடும் மிக்கோங்கியிருந்த காலத்தில் விநாயகி வழிபாடும் சிறப்புற்று விளங்கியதாக இத்தெய்வத்தைப் பறறி ஆராய்ந்த திரு. பி.என். சர்மா குறிப்பிடுகிறார்.

சைன சமயத்தினர் தாங்கள் வழிபடும் யோகினிகளில் ஒன்றாக விநாயகியைக் கருதினர். சைனசமயப் பழஞ்சுவடி ஒன்று "மகாயோகி, சித்தயோகி, பிரிடாக்ஷி" முதலிய யோகினிகளில் ஒன்றாக கணேசுவரியைக் கருதுகிறது."சைனபிரபா சூரி" என்ற புகழ்பெற்ற பேராசிரியரால் கி.பி. 1306ல் எழுதப்பட்ட 'விதிப்பிரபா' எனும் நூலில் இத்

தெய்வம் விநாயகி அல்லது வைநாயகி எனக்குறிக்கப்படுகிறது.

பௌத்த மதத்தில் யானைத் தலையுடன் விளங்கும் இத் தாய்த்தெய்வம் "கணபதி ஹ்ருதையா" என்று குறிக்கப்பட்டுள்ளது. திரு. அமிர்தானந்தா என்ற பௌத்தமத அறிஞர் பெருமான் "தர்ம கோச சமக்கிரகா" என்ற நூலில் இத்தேவியைக் கீழ்க்கண்டவாறு குறிக்கிறார்.

"கணபதி ஹிருதயா, ஏகமுகா,
துவிபுஜா, வரதா
அபயா நிரித்யாசனா"

அதாவது கணபதி ஹ்ருதயாவிற்கு ஒரே முகம்; இரண்டு புஜங்கள், வரத அபய முத்திரைகள் நடனநிலை என்பதாகும்.

இத்தெய்வத்தைப் பற்றி விரிவாக ஆராய்ந்த திரு. பி.என். சர்மாவும், பேராசிரியர் திரு.எஸ். கே. இராமச்சந்திர ராவும் விநாயகியைப் பற்றி விரிவான புராணங்களோ, சிற்பக் குறிப்போ இல்லை என்பர். வடமொழியில் ஸ்கந்தபுராணத்தில் காசிக் காண்டத்தில் யோகினிகளின் பட்டியலில் விநாயகி, கஜானனா எனும் பெயர்கள் காணப்படுகின்றன. அறுபத்தி நான்கு யோகினிகளின் பட்டியலில் விநாயகியும் காணப்படுகிறாள். யோகினி என்பவர்கள் அன்னை பார்வதி காளியாக அசுரர்களை எதிர்த்துப் போரிடச் சென்றபோது, அன்னையைச் சூழ்ந்து நின்று காளிக்கு உதவியாக அசுரர்களை எதிர்த்தவர்கள். இவ்யோகினிகள் தாந்திரீக வழிபாட்டோடு சம்பந்தப்பட்டவர்கள் என்பார் திரு. ஜெ. என். பானரஜி அவர்கள்.

கி.பி. 16ஆம நூறறாணடில கேரளததில தோனறிய ஸ்ரீ குமாரர எனபவரால எழுதபபட்ட "சிறப இரததினா" எனற சிறப நூல சக்தி கணபதியைப பின கண்டவாறு குறிககிறது.

"சக்தி கணபதிககு யானைத தலை; பருத்தவயிறு; செநதூர வண்ணம்; நன்கு அமைநத பிருஷ்டகம், மாரபுகள்; இளமைத துடிப்புடைய பெணணுருவம்."

இடப்புறம் திரும்பிய யானைத் தலை, இருகைகள். வலக்கையில் பெரிய தாமரை மொட்டு, சிறிய தடி போன்று காணப்படுகிறது. தொங்கிய இடக்கை. கச்சுடன் விளங்கும் ஸ்தனங்கள். இடுப்பிற்குக்கீழ் புலியின் கால்பாகம். நிமிர்ந்து சுருண்ட வால். இத்திருவுருவை கி.பி. 17 ஆம் நூற்றுண்டைச் சார்ந்ததாக திரு. எ.வி. ஜெயச்சந்திரன் குறிப்பார்கள்.

விநாயகியின் திருவுருவச்சிலைகள் வடநாட்டில் அதிகம் கிடைத்துள்ளன. அவை கி.பி. முதல் நூற்றுண்டு முதல் கி.பி. 16-17ஆம் நூற்றுண்டைச் சார்ந்தவைகளாக உளளன இராஜஸ்தானில ஜெயபபூர மாவட்டததில கிடைதத விநாயகி சிறபததை கி.மு. முதல நூறறாணடு முதல கி.பி. முதல நூறறாணடைச சாரநததாக ஆயவாளரகள கொளவர.



தமிழகததிலும பலவேறிடங்களில விநாயகியின திருவுருவசசிலைகள உளளன. கன்னியாகுமரி மாவட்டம சுசீயநதிரததில் ஒரு தூணில் விநாயகியின சிறபமுளளது. இது கி.பி. 17ஆம் நூறறுண்டைச சாரநததாகும். அமரநத கோலததில வலககாலை மடிதது இடககாலைத் தொஙக வைத்த நிலையிலுள்ளது. தலையில் வேலைபபாடுடன கூடிய அழகிய மகுடம் விளங்குகிறது. மேறகைகளில் அங்குச பாசமுளளன. கீழககைகள் அபய, வரத ஹஸ்தங்களாக விளங்குகின்றன. கழுத்திறகுக் கீழ் பெண்ணுருவம், கழுத்தணியும், பூணுலும் அழகு செய்கின்றன. கால்களில் சிலம்புகளுள. அழகாகக் கட்டப் பட்ட ஆடையும், மேகலையும் அழகூட்டுகின்றன. இடப்புறம் திரும்பி பாசத்தைத் தொடுமளவு துதிக்கை நீணடு விளங்குகிறது.

குறிப்பிடத்தக்க மற்றுமொரு சிற்பம் மதுரை அருள்மிகு மீனாட்சி சுநதரேசுவரர் கோவிலில் சுவாமி சந்நிதியின் நுழைவாயிலில வடபுறமுள்ள தூணில் காணபபடுகிறது. இது நினற கோலம். தலயில மகுடம்; சறறே வலப்பககம் சாய்ந்து,

இதனைப போனற மற்ெறாரு உருவததை சிதம்பரத்திலும் காணலாம். நின்ற கோலம்தான. வலககயில் பூங்

# துயர் ஓட்டிய தேரோட்டி

பாரதப் போர் முடிவுற்ற பொன்னான நாள் அது. போர்க் களத்தில் அர்ஜுனனுக்குத் தேரோட்டிய கண்ணன் தேரை நிறுத்தினான். ஆனால் அவன் கீழே இறங்கவில்லை. வழக்கத்திற்கு மாறாக அவன் அர்ஜுனனை முதலில் இறங்கிடக் கூறினான். அர்ஜுனனுக்கு அதன் அர்த்தம் புரியவில்லை. ஆயினும் மறுப்பு எதுவுமின்றி மௌனமாய் இறங்கிவிட்டான். அவனைத் தொடர்ந்து கண்ணனும் இறங்கினான். அடுத்தக் கணம் அத்தேர் திடீரென்று தீப்பற்றி நொடிப் பொழுதில் எரிந்து மறைந்தது. போரின் போது அசுவத்தாமன் அதன்மீது ஏவிய நாராயணாஸ்திரத்தின் விளைவு அது. அப்போது அது செயல்படமுடியவில்லை. முற்றிலும் முடங்கியிருந்தது. தேர்மீது அசைந்தாடிக்கொண்டிருந்த அனுமக்கொடியின் மகிமை அது. கண்ணன் வழக்கம் போல் அன்று முதலில் இறங்கியிருந்தால் கொடியில் குடிகொண்டிருந்த அனுமனும் கீழே குதித்து இருப்பான். ஏனெனில் அனுமன் அங்கு தங்கியிருந்தது அர்ஜுனன் மீது அவன் கொண்டிருந்த அளப்பரிய அன்பு காரணம் அல்ல. பகவான் கண்ணன் மீது கொண்டிருந்த பரம பக்தியே காரணமாகும். அனுமன் அங்கு இருந்திராவிடில் நாராயணாஸ்திரம் அப்போதே நோட்டம் பார்த்து இருக்கும். தேருடன் அர்ஜுனனும் தீயில் அகப்பட்டு தீர்ந்து போய் இருப்பான். கதை திசை மாறியிருக்கும்.

உயிர்கள் அனைத்துக்கும் அனுமனே ஆதாரமூச்சு. அவனே ப்ராண தெய்வம். வேத சொரூபம் கொண்டவன் கருடன். அதுபோன்று ப்ராண சொரூபன அனுமான். அன்னை சீதாதேவியின் இன்னுயிரைக் காத்தவன். தன்னல மறுப்பு என்பதையே தாரகமாய்க் கொண்ட லக்ஷ்மணனின் உயிரை மீட்டவன் அவன். பரம பாகவதனான பரதனுக்கு உரிய நேரத்தில் பறந்து வந்து உயிர் கொடுத்தவன் அவன். இத்தகைய அருஞ்செயல்களால் அனுமன் ராமபிரானை மட்டும் ல்ல, அயோத்தி வாழ்மக்களை மட்டும் அல்ல. மனித குலம் முழுவதுமே வானர குலம் முழுவதுமே வாழவைத்தவன். வாயு குமாரன் அவன். நீரும் நெருப்பும் அவனை நெருங்காது. விண்ணும் மண்ணும் அவனை வீழ்த்தாது. நாராயணாஸ்திரமும் அங்குச் செல்லாது. அத்தகைய வரபலம் கொண்டவன் அவன். கண்ணன் முன்கூட்டியே இவைகளை தெரிந்து வைத்திருந்தான். எனவே அர்ஜுனனை முதலில் தேரிலிருந்து இறங்கிடச்செய்து அவன் உயிரைக் காப்பாற்றினான். மரபுகள் இங்கு மீறப்பட்டு இருக்கலாம். ஆனால் மனித உயிர் இங்கு மீட்கப்பட்டு உள்ளது. தலைக்கு வந்த அபாயம் தலைப்பாகையோடு சென்று விட்டது. கண்ணன் செய்த உபாயம் அது.

திரு. ஆர். சுப்பாராவ் - திருக்கோவலூர்.

கொத்து. இடக்கை தூக்கிய நிலை. கழுத்திற்குக் கீழ் கச்சையற்ற இரு நகில்கள். இடுப்பிற்குக்கீழ் புலியின் இடுப்பும் இருகால்களுமுள. தூக்கிய வால். இத்தகைய யானைத் தலை, பெண் மார்பு, கை; புலியின் கால்பாகம் உடைய சிற்பங்களை சிற்ப நூலார் வியாக்ரபாத் விநாயகி என்பார்கள்.

இவற்றைத் தவிர திருச்செந்தூர், பவானி, திருக்குறுங்குடி ஆகிய இடங்களிலும் திருநெல்வேலித் தேரிலும் விநாயகியின் சிற்பங்களைக் காணலாம்.

## துணை நின்ற நூல்கள் :


1. Icnography of Vinoyagi - B.N. Sarma
2. Ganesakosa - Prof. S.K. Ramachandra Rao
3. Artahanari Ganapathi - D.C. Sircar, J.A.I.H. Vol.No. IV
4. The Jain Iconography - B.C. Bha Macharya
5. The Buddist iconography B.C. Bha Macharya
6. Ganesa - Alice Getty
7. Puranic and Tantric Religion - J.N. Banerji
8. Madurai Temple Complex - Dr. A.V. Jayachandran




# வைணவ வழக்குச் சொற்களும் பொருள்களும்

டாக்டர் எம். வரதராஜன் - திருப்பதி.

## இ

| | |
|---|---|
| இ | - பிரமன்; மன்மதன். |
| இஃது | - இது |
| இக்கரை | - இந்தப்பக்கத்துக்கரை, பரமபதம். |
| இக்கு | - கரும்பு, ஆபத்து, புடவையை இறுக்கும் முடிச்சு |
| இகம் | - இம்மை. |
| இகல் | - விரோதி, யுத்தம், மிடி, துக்கம் |
| இகலிடம் | - யுத்த பூமி |
| இகழ்கை | - விடுகை; அநாதரிக்கை, தூஷிக்கை |
| இகுளை | - தோழி; நட்பு |
| இங்கிட்டு | - இங்கே |
| இங்கிதம் | - குறிப்பு |
| இங்குத்தை | - இவ்விடம் |
| இங்கொழி | - இங்கே இரு |
| இசங்குகை | - நகருகை |
| இசலி | - போட்டிப் போட்டுக்கொண்டு இசலி இசலிக்கார்யம் செய்கிறார்கள் என்று பெண்டுகள் பேச்சு. |
| இசித்தல் | - இழுத்தல் |
| இசைக்கிற்றீராகில் | - சொல்லவல்லீராகில் |
| இசைகாரர் | - இயலுக்கு இசையிட வல்லவர்கள்; இசையறிவுள்ளவர்கள். |
| இசைகேட்டருளுகை | - தாலாட்டுக்கேட்கை |
| இசைமின்கள் | - சொல்லுங்கோள் |
| இசைவலம் | - இசைவு-ஒப்புக்கொள்ளுதல், அலம்-பூர்ணம் என்றாக்கி இசையுமோ என்று பொருள். |
| இஞ்சி | - மதிள் |
| இஞ்சிப் பயிர் | - தழைக்கூறு. தழையைப் பங்கு கொள்வது. இஞ்சித்தழை பயனற்றது. இஞ்சியைவிட்டு அதன் தழையை பங்கு கொண்டு பயனில்லை. |
| இட்டம் | - விருப்பம் |
| இட்டக்கால் | - செய்தால் |
| இட்டகாலிட்ட | - தன்வயமில்லாமையாலே தோழி இட்டு வைத்த காலும் கையுமாய் தான் அசைக்கமாட்டாதே இருக்கும்படி |
| இட்டவழக்கு | - சொன்னபடி நடத்தல் |
| இட்டளப்படுகை | - எளிவரவு படுகை; இருந்ததாக எழுந்திராதபடி இருக்கை |
| இட்டளம் | - இடநெருக்கம் |
| இட்டறை | - ஆனை படுகுழி, ஆனையை வீழ்த்தும் கொடி |
| இட்டிகை | - செங்கல் |
| இட்டீடு கொள்ளுகை | - வார்த்தையிட்டு வார்த்தை கொள்ளுகை; விவாதம் |
| இட்டீறு | - களிப்புடன் புரியும் விளையாடல் |
| இட்டுமாறினாற் போல | - பழைமை நீங்கிப் புது நிலைமையை அடைந்தாற் போல |
| இட்டுப்பிறந்து | - தகுந்தவனாயிருந்து |
| இட்டுப்பிறந்தவன் | - கொடுத்து வைத்தவன் என்பது போல |
| இடக்கைப் புரிமுறுக்குகை | - மாறுபடும் செயலைப் புரிகை. |
| இடங்கொள்ளுதல் | - வியாபித்தல், விசாலமாதல் |
| இடநாடு | - இடமுடைத்தாய் விசாலமானநாடு, ஸ்ரீவைகுண்டம் |
| இடம்பாடு | - செல்வம், உடைமை, ஐச்வர்யம் |
| இடம்பெறுதல் | - விசாலமாதல் |
| இடர்க்கடல் | - துக்க ஸாகரம் |

இடரசகுழி - துககு சககரம
இடராட்டியேன - துககப படுகிற நான; 3நாவாட டியான நான பெணபால சொல
இடவகை - வசிகுதும இடம
இடவணர - இடது பககத்திலுள்ள மேலுதடு
இ...வன - மணறுஙகடடி
இடவை - வழி
இடவெநதை - திருவிடவெநதை எனனும திவயதேசம. பிராட் டியை இடது துடை யில வைததிருககும எநதை-எந தநதை-எனறு பெரு மாள திருநாமம், அதுவே ஊருக்குமாயிற்று.
இடறுகடடை - முட்டுககட்டை
இடுகாடு - எரிககும காடு
இடுசிவப்பு - இயற்கையாலனறிச் செயற் கையால் வந்த சிவப்பு;
இடும்பர் - ராக்ஷஸர், செருக்குடை யோர்;
இடும்பை - துக்கம்
இடைகழி - இடையிலுள்ள கழி-வழி. வாசலுக்கும் கூடத்துக் கும் இடையில் வழிப் பாதை மட்டுமாயுள்ள சந் துபோல் நெருக்கமான இடம். வாசல்புறத்து இடைகழியை 'வாசல்ரேழி' என்றும் கொல்லை இடை கழியை 'கொல்லை ரேழி' என்றும் கொச்சையாகச் சொல்லுவதுண்டு.
இடைச்சரி - தோள்வளை
இடைச்சுவர் - இடையூறு, தடங்கல்
இடைச்செறி கடைச்செறி - விரலிலே மோதிரத்துக் கீழும் மேலும் இடுகிற வளையங்கள்
இடைப்பட்ட - அகப்பட்ட
இடையாட்டம் - வியாபாரம், பாரிப்பு, விஷ யம்
இடையுவா - பௌர்ணமியில்
இண்டக்குலம் - இண்டர்களின் திரள், இண் டர்-நீசர்
இண்டின இடம் - நெருக்கமான இடம்
இண்டை - செறிவு, தண்ணிமை, தாம ரைப்பூ, பூமாலை
இணக்கு - விளையாட்டு, கூடியாடி
இணர் - கொழுந்து, பூங்கொத்து, அரும்பியா நிற்கும் துழாய், இணருதல்- மலருதல்
இணைக்கு வடு - இரண்டு சிகரங்கள்
இணைக்கூற்றம் - இரண்டு யமன்
இணைச்செப்பு - இரண்டு முலை, செப் புப்போல் சிறிதாயிருப்ப தால் முலைக்கு உவமை யான செப்பே முலையாகச் சொல்லப்படுகிறது.
இத்தனைவர் - இவ்வளவு பேர்
இதணம் - பரண், பரணி
இந்தளூர - மாயவரத்திலுள்ள திவ்ய தேசம், திருவிந்தளூர், பரிம ளரங்கன் என்று பெருமா ளுக்குப்பெயர்.
இந்தளம - கும்மட்டி
இந்தாணும் - இந்தாரும் என்பதன் கொச்சை
இந்தளம் - புகை, இசை, எரியிடுகலன், விறகு
இந்திரகோபம் - பட்டுப்பூச்சி
இந்திரன் சிறுவன்- அர்ஜுனன்
இந்திரைக்கோன் - திருமால்
இந்து - காடி, சந்திரன், கரி
இந்துளி - பெருங்காயம்
இப்போதாக விடப்- போமோ - திடீரென்று இப்போதே விடப்போமோ
இப்பர் - செட்டிகள்
இப்பை - பழி
இம்பர் - மனிதர்
இமம்சூழ்மலை - இமம், ஹிமம்-பனி, இமய மலை
இமயத்துள்ளான் - திருப்பிரிதி எம்பெருமான்
இமவந்தம் - இமயமலை
இமிலேறு - செருக்கடியான தோளையு டைய எருது
இமை - கண்ணிமை, விசாரி, கரடி, பிரகாசித்தல், இமை-க்ஷ ணம், மயில்
இமையவர் - தேவர்
இமையாத்தடங் கண் - இமையோடு இமை பொருந்தாத பெரிய கண்
இமையாத கண் - அறிவு குறைதலாகிற குற் றமற்ற உட்கண்
இமையோருலகு - பரமபதம்
இயக்கம் - சஞ்சாரம்
இயக்கர் - யக்ஷர்
இயங்கு - நடையாட்டம்
இயந்து - இயத்தல் கொடுத்தலாய் ஈந்து என்றபடி
இயம்புதல் - சொல்லுதல், கூப்பிடுதல்
இயல்வு - ஸ்வபாவமும் முயற்சியும்
இயல் - மதிள், ஸ்வபாவம், கானம், இசை, சாயல், நடை, தமிழ் இயல், சப்தம்
இயலுகை - பலிக்கை, சொல்லுகை
இயலமரர் - இயற்றியுடைய அமரர் கள், இயற்றி-இயல், தகுதி, யோக்யதை, அதிசயம்
இயலலாகாது - முயற்சி பண்ணலாகாது

இயலாவார் - தஞ்சமாவார்
இயற்றுவாய் - நடப்பாய், ஸ்தோத்ரம் பண்ணுவாய்
இரட்ட - வீச
இரண்டட்டத்திலும் - இரண்டு அட்டத்திலும், அட்டம் - பக்கம்
இரண்டாம் நிலம் - மேல் மெத்தை/மாடி
இரணம் கொண்ட தெப்பர் - கடன் கொடுத்து வாங்குபவர்
இரணியம் - பொன்
இரந்திட்டகை - சரணம் புகுந்த கை
இரவலுடம்பு - பரதந்திரமான உடம்பு, சொந்தமில்லாத உடம்பு
இரவாளன் - சந்திரன், இரப்பாளன்
இராக்கதி - ராக்ஷஸி
இராகம் - ஆதரவு
இராகவன் - இராமன்
இரா நாழிகை - இராப்போது
இராமடம் - இரவில் தங்குவதற்காக உள்ள தர்மச்சாவடி.
இராமபிரான் - ராமன் என்கிற இத்தால் புறம்பே போகாமல் காற் கட்டும்படியான அழகைச் சொல்லுகிறது. ராமன் என்பதற்கு ரமிக்கச் செய்கிறுன் என்று பொருள். பிரான்- உபகாரம் செய்பவன். அவனது அழகு நிலாத்தென்றல், தண்ணீர் போலே பிறர்க்கே யாயிருக்கும் உதவி செய்யும் தன்மையைச் சொல்லுகிறது. ஆக இராமபிரான் என்பது தன்னழகாலே பிறர்க்கு உதவி செய்கிறவன் என்பர்.
இராமாநுசன் - தீபாராதநத் தட்டுக்கு வைத்த பெயர்; கோயிலிலே 'இராமாநுசன் பிடித்தான்' என்று தீபம் ஏற்றித்தருவதற்கு அருளப்பாடு.
இராமாநுசமுடையார் - கோயிலில் கோஷ்டியிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவர்க்கும் தீர்த்த விநியோகத்தின் போது அருளப்பாடு, "அருளப்பாடு பெரியநம்பி இராமாநுசமுடையார்" என்று பெரியநம்பி அய்யங்காருக்கும் அவருக்குப் பின்புள்ள தீர்த்தக்காரர்களுக்கும் கோயிலில் கோஷ்டி அருளப்பாடு.
இரிந்தன - செதிறறின
இரியப்புகுந்து - ஆரவாரப்படும்படி
இருக்கலந்தவேதம் - ருக்குகள் அதிகமாயுள்ள வேதம்
இருக்கலாய்த்து - இருக்கலாயிற்று.
இருக்கார்மொழி - இருக்கில் ஆர்ந்த மொழி- நாராயணநுவாகம், வேதங்கள் எல்லாம் தன்னுள்ளே ஆரும்படியான மூலமந்திரம்
இருக்கிலங்கு திருமொழி - வேதத்திலுள்ள புருஷஸூக்தம் முதலியன
இருக்கு - ருக்கு முதலான வேதம்
இருக்குறுமந்தணர் - வேதாத்யயநபரரான பிராம்மணர்
இருகரையர் - குற்றத்தையும் குணங்களையும் பார்க்கும் இறைவனை இருகரையர் என்பர்
இருகலை - வடமொழியும் தென்மொழியும் (தமிழ்)
இருகால்மட்டு - இரண்டாம் தடவை
இருங்கலவி - பலவிதமானகலவி, அதிகமான கலவி
இருகை மதவாரணம் - திருவேளைக்காரனுக்குப் பேர். இருகைமதவாரணமென்றும் கர்ப்பதாஸர்களென்றும் கோயிற்பணிப் பெண்டாட்டி பிள்ளைகளுக்குப் பட்டர் இட்ட பெயர்.

(தொடரும்)

மதிப்பளிக்க வேண்டியவை மூன்று
**முதுமை, மதம், சட்டம்**

விரும்ப வேண்டியவை மூன்று
**தூய்மை, நேர்மை, உழைப்பு**

பாராட்ட வேண்டியவை மூன்று
**அழகு, அறிவு, குணம்**

வளர்த்துக்கொள்ள வேண்டியவை
**அஞ்சாமை, உற்சாகம், திருப்தி**

காப்பாற்ற வேண்டியவை
**செல்வாக்கு, நட்பு, பற்று**

விலக்க வேண்டியவை
**புகை பிடித்தல், மாது, சூதாடல்**

கட்டுப்படுத்த வேண்டியவை
**நா, உணர்ச்சி, ஆசை**

கவனிக்க வேண்டியவை
**பேச்சு, நடத்தை, செயல்**

ஒழிக்க வேண்டியவை
**சோம்பல், பொய், புறங்கூறல்**

முக்திபெற நீங்கவேண்டியவை
**ஆணவம், மாயை, காமம்.**

தொகுத்தவர்: கமலா மாரியப்பன் - **கோவை.**

# மாறன் கண்ட முத்துச்சாமி முதலியார்

திரு. ஜி. இலட்சுமணன் - சேடப்பாளையம்.

ஆழ்வார்களில் தலைசிறந்தவர் நம்மாழ்வார் ஆவார். இவர் திருநெல்வேலி மாவட்டத்தில் ஆழ்வார் திருநகரி என்ற ஊரில் வைகாசி மாதம் விசாக திருநட்சத்திரத்தில் திருக்காரியாருக்கும் உடைய நங்கையாருக்கும் திருக்குமாரராக திருவவதரித்தார்.

மாறன் அவதாரத்தால் அந்த திருநகரிக்கு ஒப்பாக உலகத்தில் ஒரு திவ்ய தேசம் உண்டோ? அவர் பிறந்த விசாகத்துக்கு ஒப்பானதான ஒரு நாள் உண்டோ? இந்த ஆழ்வாருக்கு ஒப்பானவர்கள் உண்டோ? அவர் செய்த திருவாய்மொழிக்கு ஒப்பான நூல் தான் உண்டோ? என்கிறார்.

## வரவரமுனிகள்

"உண்டோ வைகாசி விசாகத்துக்கு
ஒப்பொரு நாள்
உண்டோ சடகோபர்க்கு ஒப்பு
ஒருவர் - உண்டோ
திருவாய்மொழிக்கு ஒப்பு
தென் குருகைக்கு உண்டோ
ஒரு பார் தனில் ஒக்கும் ஊர்"

நம்மாழ்வார் நான்கு வேதங்களை முறையே திருவிருத்தம், திருவாசிரியம், திருவந்தாதி, திருவாய்மொழி என நான்காக அருளிச் செய்தார்.

ஸாமவேத ஸாரமான திருவாய்மொழியை நம்மாழ்வார் ஜ்ஞான தசையில் தன் பேச்சாகவும் பிரேம தசையில் பெண் பேச்சாகவும் பேசி இருக்கிறார்.

<u>ஜ்ஞான தசையில்</u>

= 73 திருவாய்மொழிகள்

<u>பிரேம தசையில்</u>

| | | |
|---|---|---|
| தலைவிக் கூற்று | = 17 | ,, |
| தாய்க் கூற்று | = 7 | ,, |
| தோழிக் கூற்று | = 3 | ,, |
| | 100 | ,, |

மாறன் திருவாய்மொழியில் தனக்கு உண்டான வைலக்ஷணத்தைக் கூறுகிறார்.

1) எம்பெருமான் தனக்கு ருசியைப் பிறப்பித்த படியையும்

2) அந்த ருசிதான் பரபக்தி, பரஜ்ஞான, பரம பக்திகளாய்க் கொண்டு பக்குவமான படியையும்.

3) அவன் அருளால் பிரகிருதி ஸம்பந்தத்தை அறும் படிச் செய்தும்

4) வீடு பேற்றுடே திருவாய்மொழியை தலைக்கட்டினார்.

மூன்றாவதான பிரகிருதி ஸம்பந்தத்தை அறுத்தான் என்பதை பத்து திருவாய்மொழிகளில் உபதேசிக்கிறார். அதிலே ஒன்று "நண்ணாதார்" என்ற திருவாய்மொழியாகும். இது 4-9-1

இந்த உலகத்திலுள்ள மக்கள் சரீர ஜீவனத்திற்காகத் தகாத வழியில், தகாத காரியம் செய்து, தகாத பொருளை ஈட்டி, தகாத முறையில் அநுபவிப்பதைக் கண்டு மனம் நொந்து, இந்த பிரகிருதி ஸம்பந்தத்தை ஒழித்து உன் திருவடியில் சேர்த்துக்கொள் என்று பிரார்த்தனையாக அமைந்ததைக் காண்போம்.

ஒருவன் நன்றாக வாழ்ந்தா அனைத்துச் செல்வமும் பெற் இருந்தான். ஒருநாள் தி என்று அனைத்துச் செல்வ இழந்து விட்டான். கு பத்துடன் நடுத்தெருவி வந்து பிச்சை எடுக்கும் விற்கு வந்து விட்டான்.

அவனைக் கண்ட அவனுடைய விரோதிகள், அவ படும் துன்பத்தைக் கண் தான் இன்புற்று, அதற்க புதிய ஆடைகளை உடுத்து கொண்டு, வெற்றிலைப் பா போட்டுக்கொண்டு, புன்முறு லுடன் அவன் எதிரே நடக்கின்றனர். இக்காட்சியை பார்க்கிறார் நம்மாழ்வார்.

மற்றொருபுறம் செல்வம் இழந்தவனைக் கண்டு அவனுடை உறவினர்கள் மனம் உரு அழுது, அவன் துன்பத்தை த துன்பமாக நினைத்து உரு கின்றனர். இக்காட்சியை பார்க்கிறார் மாறன்.

ஒருவர் படும் துக்கத்தை கண்டு ஒருவர் இன்புறு றார், மற்றொருவர் துன்பு கிறார். இது என்ன உலகிய வாழ்க்கை என்று நம்மாழ்வா அலறிக்கொண்டு 'கண்ணா கடல் கடைந்தாய்! உன் திரு டிக்கே நான் வரும்படி கால நீட்டாமல், அடியேனைச் சாகு

படி ஒரு வார்த்தை சொல்' என்கிறுர்.

நண்ணுதார் முறுவலிப்ப, நல்
உற்ருர் கரைந்து ஏங்க
எண்ணுராத் துயர் விளைக்கும்
இவை என்ன உலகியற்கை
கண்ணுளா! கடல் கடைந்தாய்
உன் கழற்கே வரும் பரிசு
தண்ணுவாது அடியேனைப்
பணி கண்டாய் சாமாறே,
(-திருவாய்மொழி 4-9-1)

[நண்ணுதார்-விரோதிகள்; எண்ணுராத்-எண்ணில் அடங்காத; தண்ணுவாது- விளம்புதல்; பணி கண்டாய்-ஒருவார்த்தை அருளிச் செயல் வேண்டும்; சாமாறே-சாகும்படி; கழல்-திருவடிகள்]

ஒரு கிராமத்திற்கு தலைவராக இருப்பவர்கள் தன் அதிகாரத்தால் பொருள் சேர்க்கும் விதத்தை விளக்குகிறுர்.

ஒரு வீட்டில் அண்ணன் தம்பி இருவர் இருந்தார்கள். அதில் அண்ணன் நல்ல குணம் கொண்டு சாதுவாக இருப்பான். தம்பியோ கெட்ட குணமும், கெட்ட செய்கை உடையவனாக இருந்தான். தமபியால ஊர்வம்பு, பொருள் நஷ்டமும் ஏற்பட்டது. சொத்துக்களை விரையம் செய்யவும் முற்பட்டான்.

அண்ணன அந்த ஊர தலைவரிடம் சென்று "ஐயா என தம்பி செயகையால், மனை, வீடு, சொத்துக்கள் அழிகிறது. அதோடு ஊராரும் என்னை பயமுறுத்துகின்றனர். ஆகையால் தாங்களதான் காப்பாற்ற வேண்டும்" என்று வேண்டினான.

தலைவர் அவனை நோக்கி, "நீ பயப்படாதே, உன சொதது அழியாமல் இருகக அனைத்து சொததுக்களையும் என பெயருக்கு எழுதிககொடுதது விடு. நீ வேணடுமபோது திருபபி எழுதிககொடுதது விடுகிறேன. இதனால் உன் சொதது நிலைககும. உனனைப் பயமுறுததுபவர்களை நானே கவனிததுக் கொள்கிறேன. நீ கவலை இனறிச் செல" எனருன்.

அண்ணனும் தலைவர் கூறும் நல்ல வார்ததையை நம்பி அனைத்துச் சொத்துககளையும் எழுதிக்கொடுத்துவிட்டான.

சிலநாள் கழிதது தலைவர் மூத்தவனை நோக்கி, "உனக்கு நன்மை செய்ய போய் உன் தம்பி என்னை மானம் போகும் படிப் பேசிவிட்டான். அவனுடைய ஒரு காலோ கையோ எடுத்துவிட்டு வா. எது வந்தாலும் நான் இருக்கிறேன் என்று கூற.

மூத்தவன் கோபம் கொண்டு தம்பியை நோககி சண்டையிட, தம்பிக்கு அடிபட்டு இறந்து விட, அதைக்கண்டு அண்ணன் கலங்க, அவ்விடத்திற்கு தலைவர் வந்து, "நீ சாகும்படி அடிச்கலாமா? உனக்கு அரசாங்க துன்பம் வரும். அநத துன்பத்தை நீக்குகிறேன். அதற்குப் பணம் கொணடுவந்து கொடு" என்று கேட்க, மூததவன் கலங்கியமனதுடன் வட்டிககுப் பணம் வாங்கி கொண்டு போய் தலைவரிடம் கொடுத்து 'என்னை இந்த ஆபத்திலிருந்து காப்பாற்ற வேண்டும்' என்று கதற, தலைவரும் அந்த ஆபத்திலிருந்து காப்பாற்றினார்.

சில நாள் கழித்து மூத்தவன் பணமிலலாமல குடும்பம் வறுமையால வாட, நிலம், பொருள் இழநதோமே எனறு கதறி அழ, பின்பு தலைவரை குறை கூற ஆரம்பித்தான்.

இதைக் கணட தலைவர் மறைமுகமாக ஆளவைதது மூத்தவனைக் கொனறு விடுகிறுர். அவன சொததையும, பொருளையும அநுபவிககிருர. இதைக கணட நமமாழவார கூறுகிருர.

"மறுக்கி வல்வலைப் படுத்திக்
குமைத்து இட்டுக் கொன்று உண்பர்

அறப்பொருளை அறிந்தோர் ஆர்
இவை என்ன உலகியற்கை?"
(திருவாய்மொழி 4-9-6)

[மறுக்கி-மனத்தைக் கலக்கி; வலவலைப் படுத்தி-கலககமான வலையிலே அகப்படச் செய்து; குமைத்திட்டு-சொத்துக்களைப் பீடித்து; கொன்று-கொலை செய்து; உண்பர்-சாப்பிடுவாரகள்.]

இந்த உலகத்தின் இயல்பை மேலும் கூறுகிறுர். ஒருவன தன்னை நன்ருகப் புகழநது சொல்ல வேணடு எனறு நினைக்கிறுன். இல்லாத குலத்தை ஏறிட்டுக கொண்டு அஹங்கரிக்க நினைக்கிறுன். பங்காளிகள, உறவினர்கள், சிறந்த செல்வம், மனைவி, மக்கள், வீடு அனைத்தும் தனக்கு நிலையானது என்று நினைத்து இருக்கும் போது திடீரென அவன் உடமபு இருக்க அவன் உயிர் பிரிய என்ன உலகியற்கை என்று நம்மாழ்வார் கூறுகிறுர்.

அத்துன்பம் தாங்க முடியாமல், "கடல் வண்ணு! எம் பிரானே! உனக்கு அடியவனான என்னை இத்தனை நாளும் போல் நினைத்திராமல் உன் திருவடி நிழலிலே அழைத்துககொண்டு அடிமை கொள்ள வேண்டும். இந்த கொடிமையான உலகத்தை காட்டாதே!" என்கிருர்.

கொண்டாட்டும் நலம்புனைவும்,
தமர் உற்றூர் விழு நிதியும்
வண்டு ஆர் பூங் குழலாளும்,
மனை ஒழிய உயிர் மாய்தல்
கண்டு ஆற்றேன் உலகியற்கை;
கடல் வண்ணா அடியேனைப்
பண்டே போல் கருதாது உன்
அடிக்கே கூய்ப் பணி கொள்ளே.
(-திருவாய்மொழி 4-9-3)

இப்பாடலின் முதல்பதமான 'கொண்டாட்டும்' என்பதற்கு ஈட்டு வ்யாக்யாநத்தில் - "முன்பு இன்னான் என்று அறிய வொண்ணுதபடி அவஸ்துவாய்ப் போந்தான் ஒருவன் அல்பம் ஜீவிக்கப் புக்கவாறே 'முதலியார்' என்றாற் போலே சொல்லுவர்கள்"

ஈட்டில் சொல்லப்பட ஐஹ்திகம் என்ன என்பதை கீழே காண்போம்.

ஓர் ஊரில் முத்தன் என்ற வறியவன் இருந்தான். அவன் ஒரு பெரிய பணக்காரரிடம் சென்று தன் ஏழ்மையை சொல்லி வேலை கேட்டான். அதைக்கண்ட பணக்காரன் அவன் ஏழ்மைக்கு இரங்கி, வேலைக்கு வைத்துக் கொண்டான்.

இவனும் ஏஜமானனுக்குப் பாங்காக நடந்து கொண்டான். அதனால் வீடு முழுவதும் அவனிடத்தில் ஒப்படைக்கப்பட்டு, அதிகாரமும் கொடுக்கப்பட்டது.

இப்படிப் பல ஆண்டுகள் சென்றன. எஜமானன் பணம், நகை, பொருள்கள் ஆகியவற்றை வைக்குமிடம், சாவி வைக்குமிடம் அனைத்தும் தெரிந்து கொண்டான்.

ஒருநாள் எஜமானன் குடும்பத்துடன் வெளியூர் சென்றுவிட்டார். அதைப் பயன்படுத்திக்கொண்டு, பணம், நகை, பொருள்களை இவனே கொள்ளை அடித்து மறைத்து வைத்துவிட்டுத் திரும்பி எஜமானன் வீட்டிற்கு வந்து, தானாகவே தன் உடம்பு முழுவதும் கயிற்றால் கட்டிக்கொண்டு உடல் முழுவதும் கீறிக்கொண்டு ரத்தம் ஒழுகும்படிச் செய்து கொண்டான். பின்பு "ஐயோ!...... ஐயோ!" என்று கத்தி ஊரை அழைத்தான்.

ஊரார் வந்து முத்தனை என்ன விஷயம் என்று கேட்க திருடர்கள் என்னைக் கட்டிப் போட்டுப் பொருளை அபகரித்து விட்டார்கள் என்று சொல்லி, ஊராரையும் நம்ப வைத்தான். எஜமானனையும் நம்ப வைத்தான்.

எஜமானன் வறுமையில் வாடியதால், அவரைவிட்டு முத்தன் நீங்கிப் போய்விட்டான். சில நாள் கழித்து அவன் பெரிய வசதிப்படைத்தவன் போல் ஊரில் நடமாடிக் கொண்டு இருந்தான்.

தன் வறுமையை போக்கிக் கொள்ள நினைத்து எஜமானன், முத்தனைப் பார்த்து, 'முத்தா இங்கே வா!' என்று அழைத்தார். அதற்கு முத்தன் கோபம் கொண்டு எஜமானனைப் பார்த்து, "என்னை வெறும் முத்தன் என்று கூப்பிடாதீர்கள். ஊருக்குப் பெரிய ஆளான என்னை 'சாமி' என்று சேர்த்து கூப்பிடு' என்றார். அதற்கு இசைந்த எஜமானன் 'முத்துசாமி' என்று கூறி அவனைக் கொண்டாடினார.

சிலநாள் கழிதது ஒருநாள முததன் வீதி வழியாகப்போய கொண்டு இருந்தான். அவ்வமயம் எஜமானன், 'முததுசுவாமி இங்கே வா!' என்று கூறின மறுபடியும் அவனுக்கு கோப வந்துவிட்டது.

என்னை என்ன நினைத்து கொண்டு இருக்கிறீர்கள் வே லமாக முத்துசாமி என்கிறீ கள். நான் பல தொழில்க நடத்தும் முதலாளியாக இருக் றேன். முதலாகிய செல்வத்தை யும் பெற்றுள்ளேன். என்னை முதலியார் என்று அழைக யோக்யதை இல்லையோ" எ றான்.

உடனே எஜமானன் 'முத்துசாமி முதலியார்' என்று கூ அவனைக் கொண்டாடினார்.

இந்த ஐஹ்திகத்தால் பண காரன் ஏழையாவதும் ஏழை பணக்காரன் ஆவதும் அவ இவனை புகழ்ந்து கொண டாடுவதும் இவனைப் அவ புகழ்ந்து கொண்டாடுவதும கிய இந்த பிரகிருதி ஸம்ப தமான வாழ்க்கை வேண்டா என்று மாறன் தன் திருவாய மொழியில் பகருகிறார்.

தாழ்ந்த பிரகிருதியில் தாழ்ந்த உடலைக்கொண்டு தாழ்ந்த அறிவினால் - தாழ்ந் பொருளை விரும்பி - தாழ்ந் வழியில்- தாழ்ந்த முறையில் பொருளைப் பறித்து உண் ணும் உலகியல் வாழ்க்கை விட்டு, இத்தாழ்ந்த உடலில் - உடம்பு வேறு, ஆத்மா வேறு என்று பகுத்து அறிந்து ஆத்மாவின் உண்மைத்தன்மை அறிந்து, உயர்ந்த பொருளான எம்பெருமானை உயர்ந்த வழியில், உயர்ந்த முறையில் வீடு பேற்றை பெறுவதே உயிரின் நோக்கமாக அமைய வேண்டும் என்பதே, 'மாறன கணட முத்துச்சாமி முதலியார' ஆகும்.



Published on behalf of TT Devasthanams by N.S. Ramamurthy, M.A, Editor-Incharge and
Printed at T.T.D Press, by M. Vijayakumar Reddy, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

